



# Face to Face with Nature



**சில்கா :** சிறுவர் சிறுமியர் ஓடி, ஆடிச் சிட்டுப்போல் பறந்துதிரிய அவர்களது கனவுலகம் ஒரிஸ்ஸாவின் கிழக்குக் கடற்கரைப் பகுதியிலுள்ள சில்காதி. இங்கு இருக்கையில் அவர்கள் இயற்கையின் பாடங்களை நேரில் கற்றுக் கொள்கிறார். டால்பின் நாரை போன்றவற்றை நேரில் கண்டு களிக்கிறார்கள்.

**பெற்றோர்களே :** உங்கள் குழந்தைகளுக்கு இந்த அதிசய அழகைக் காட்டுங்கள். சில்காப் பகுதிக்குக் குளிர்காலத்தில் பல நாடுகளிலிருந்து வண்ணப் பறவைகள் வந்து சேர்கின்றன. இங்கு படகுகளில் அமர்ந்து இங்குள்ள பல தீவுகளுக்குச் சென்று களிக்கலாம். நீர் விளையாட்டுகள் எல்லோருக்கும் குதூகலத்தை அளிக்கும். இந்த நீல நிறக்கடல் ஏரியில் காளிஜெய் கோவில் உள்ளது. இதைப்பற்றிய கதை உள்ளத்தை உலுக்கும்.. இந்த அழகிய சில்காப் பகுதியைப் பல புகைப்படங்களாக எடுத்து ஒன்றாகப் பொக்கிஷம் போல வைத்துப் பாதுகாத்து அவ்வப்போது கண்டு களியுங்கள்.







For more information contact : Director, Tourism; Paryatan Bhavan Bhubaneswar-751014 , Tel : (0674) 432177, Fax: (0674) 430887 e.mail: ortour@dte.vsnl.net.in, website: orissa-tourism.com Tourist Offices at: **Chennai** : 42/18, Mount Road, (2nd Floor) Gee Gee Complex, Pin - 600002, Telefax : (044)8534090 **Calcutta:** Utkal Bhawan 55, Lenin Sarani, Pin : 700013, Tel : (033) 2443653, **New Delhi :** Utkalika, B/4, Baba Kharak Singh Marg Pin - 110001, Telefax (011) 3364580



# அம்புலிமாமா

மதிமுகம் : 103 அக்டோபர் 2000 புன்னகை : 4



## பொருளடக்கம்



### சிறப்புப் படைப்பாக



வாய்ச்சொல் வீரர்கள்! (வேதாளக் கதை)

திருடனின் தன்மானம்





பாரதப் பண்பாடு-வரலாறு

போதும் உன் கதை



Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K Press Pvt. Ltd., Chennai–600 026 on behalf of Chandamama India Limited, Chandamama Buildings, Vadapalani, Chennai–600 026. Editor: Viswam

நீங்கள்

அயல்நாடுகளில்
உள்ள உங்கள்
உறவினர், நண்பர்களுக்கு



# அம்புலிமாமா

இதனை அவர்கள் விரும்பும்
மொழியில் கொடுங்கள்

**அஸ்ஸாமி, வங்காளம், ஆங்கிலம், ஹிந்தி, குஜராத்தி, கன்னடம், மலையாளம், மராட்டி, ஒரியா, சம்ஸ்கிருதம், தமிழ், தெலுங்கு**

அயல் நாட்டிலும் தாய்நாட்டில் உள்ள
மகிழ்ச்சியை அவர்கள் அனுபவிக்கட்டும்

**சந்தா விவரம்**

எல்லா நாடுகளுக்கும் விமானத்தபாலில்
பன்னிரண்டு பிரதிகளுக்கு ரூ.900.

இந்தியாவில் தரைவழித் தபாலில்
பன்னிரண்டு பிரதிகளுக்கு ரூ.120.

நீங்கள் செலுத்தும் பணத்தை டி.டியில் அல்லது மணியார்டரில் 'சந்தமாமா இந்தியா லிமிடெட்' என்ற பெயர் எழுதி அனுப்பவும்

முகவரி :
**பதிப்பகப் பிரிவு**
**சந்த மாமா இந்தியா லிமிடெட்**
சந்தமாமா பில்டிங்ஸ்
வடபழனி, சென்னை - 600026.


ஆசிரியர்
**விஸ்வம்**



எல்லாக் கடிதப் போக்குவரத்திற்கும்
சந்தமாமா பத்திரிக்கைப் பிரிவு
சந்தமாமா பில்டிங்ஸ்
வடபழனி, சென்னை - 600026.
டெலி/ பேக்ஸ்
4841778/4842087
ஈமெயில் சந்தமாமா
@விஎஸ்என்எல்.காம்

மும்பை அலுவலகம்
2/Bநாஜ் பில்டிங்ஸ்
லாமிங்டன் ரோடு
மும்பை 400004
போன்:002-3887480
பேக்ஸ்:022-3889670


அமெரிக்காவில் தனிப் பிரதி 2
டாலர்கள் வருட சந்தா:20 டாலர்கள்

பணம் அனுப்ப
வேண்டிய முகவரி:


**இந்தியா அப்ராட்**
43, வெஸ்ட் 24வது தெரு
நியூயார்க், என்.ஒய்.10010
டெலிபோன் : (212)929-1727
பேக்ஸ் : (212) 627-9503




**பிழைதிருத்தம் :** பாப்பீமோன் தான் முதலாவது நீளத் தாண்டுதல் வீரர். செப்டம்பர் 2000 அம்புலிமாமாவில் ஒலிம்பிக் புதிர் வினாவில் உயரத்தாண்டுதல் முதல் போட்டி' எனக் குறிப்பிட்டது தவறு. இத்தவறுக்காக வருந்துகிறோம்.



நிறுவியோர்
பி.நாகிரெட்டி சக்கரபாணி

## இந்தியாவின் எதிர்காலம் நம்பிக்கை ஊட்டுவதே!

நம் நாட்டில் கோவையிலிருந்து காஷ்மீரம் வரை பயங்கரவாதம் தலை விரித்து ஆடுகிறது. பல அப்பாவி மக்கள் கொல்லப்படுகின்றனர். பயங்கரவாதத்தை ஒடுக்க நம் நாடு ஏராளமாகப் பணத்தையும் மனிதசக்தியையும் செலவிட வேண்டியுள்ளது. இந்த பயங்கரச் செயல்களை ஒடுக்க நாட்டின் ஆட்சியிலுள்ளவர்கள் தக்க வழிமுறைகளைக் காணவேண்டும். இப்படி முயன்றாலும் பயங்கர வாதத்தை முற்றிலும் ஒழித்துவிட முடியாது. ஏனெனில் துரோகம் செய்தல் எளிது. இதை எதிர்க்கத் துணிவும் தெளிவான நடவடிக்கைகளும், பேச்சுவார்த்தைகளும் வேண்டும். ஒரு வெடி குண்டை பயங்கரவாதி எங்கு வேண்டுமானாலும் எப்போது வேண்டுமானாலும் வீசி வெடிக்கச் செய்து மக்களை பயமுறுத்தலாம்.

இந்த பயங்கரவாதச் செயல்கள் சில வெளிநாடுகளின் பண உதவியுடன் திட்டமிடப்பட்டு செய்யப் படுகின்றன என்பது வெட்ட வெளிச்சமாகிவிட்டது. இந்நாடுகள் இந்தியா அமைதியாக செழிப்புற்று இருப்பதைவிரும்பவில்லை. இந்தியா இம்மாதிரியானவற்றைப் பல தடவைகளில் சந்தித்து வெற்றி பெற்றுள்ளது. இதை மனதில் கொண்டு நம் நாட்டின் எதிர்காலம் நம்பிக்கை தருவதாக உள்ளது என்பதை நாம் உணரவேண்டும். இந்தியப் பண்பாட்டால் உலகமே உயர்ந்திருக்கிறது. இனியும் இந்தியா தன் பண்பாட்டால் உலகை உயர்த்திவிடும்.

எனவே நம்மை யாரும் அச்சுறுத்திப் பணியவைக்க முடியாது என்பதை எல்லோருக்கும் எடுத்துக் கூறி நாம் துணிவும் நம்பிக்கையும் கொண்டவர்கள் என்பதை பயங்கரவாதிகள் மனதில் படியச் செய்வோம்.



# செய்திச் சுடர்

## போர் முடிவு விழா :




இரண்டாவது உலகப்போர் 1939ல் ஆரம்பமாகியது. இப்போர் நேச நாடுகளுக்கும், அச்சுநாடுகளுக்கும் இடையே நடந்தது. பிரிட்டன், பிரான்ஸ், அமெரிக்கா நேசநாடுகள். ஜெர்மனி, இத்தாலி, ஜப்பான் அச்சு நாடுகள். இவற்றோடு ஆரம்பத்தில் சேர்ந்திருந்த ரஷ்யா பிறகு நேசநாடுகளுடன் சேர்ந்து கொண்டது. போரை முடிவுக்குக் கொண்டு வந்த நேசநாடுகள் அச்சு நாடுகளைத் தோற்கடித்து ஹிட்லரின் பிடியிலிருந்து பல நாடுகளை விடுவித்தன. நேசநாடுகளின் தலைவர்களான சர்ச்சில், ட்ரூமன், ஸ்டாலின் ஆகிய மூவரும் ஒரு உச்சி மாநாட்டில் கூடி போர் முடிந்ததாக அறிவித்தனர். இதனை இப்போது கொண்டாடும் விதமாய் ரஷ்ய மத்திய வங்கி 100 ரூபிள் மதிப்புள்ள 500 சிறப்பு நாணயங்களை வெளியிட்டுள்ளது.

## பயன் முதலில், காரணம் பின்னரே!



ஒளிதான் மிக வேகமாய் விநாடிக்கு 1,86,000 மைல் வேகத்தில் ப்யணம் செய்வதாக இதுவரை கருதப்பட்டு வந்தது. ஆனால் ஒளித்துடிப்பை இதைப் போல் 300 மடங்கு வேகத்தில் போகச் செய்ய முடியும் என்று என்இசி ஆராய்ச்சிக் கழக அமெரிக்க விஞ்ஞானி டாக்டர் வாங் நிரூபித்துள்ளார். இதனால் ஒளி ஆரம்பிக்கும் போதே பூமியை வந்தடைந்து விடுகிறது என்றாகிறது. புவி இயலில் காரணம் பயனுக்கு முன்னுள்ளது என்ற நம்பிக்கை தகர்க்கப்பட்டு ஐன்ஸ்டினின் சூத்திரமும் தூக்கி எறியப்பட்டுவிடும் போலிருக்கிறது.

## அச்சுப் பிழை அல்ல



பிராட்ஸன் என வெளியிடப்பட்டது உண்மையில் பிராட்மேனே. ஆனால் இது உலகப் புகழ் பெற்ற கிரிக்கெட் வீரர் சர்.டொனால்ட் பிராட்மேன் அல்ல, அவரது மகனின் பெயர் தான் அது. இந்த மாதிரி பிராட்சென் என்று 30 வருடங்கள் இருக்க வேண்டியதாயிற்று. இது அநாவசிய விளம்பரத்தைத் தவிர்க்க வைத்துக் கொள்ளப்பட்ட பெயர் என்று ஜான்பிராட்மேனே பத்திரிகையாளர்களிடம் கூறினார். சர் டொனால்ட் பிராட்மேன் கௌரவிக்கப்பட்டபோது அந்த விழாவில் தன் தந்தையின் சார்பில் ஜான் பிராட்மேன் என்று தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டார். 1972 வரை அவர் பிராட்செனாகத்தான் இருந்தார் என்பதைக் குறிப்பிடத்தான் வேண்டும்.

## தவறுகளுள்ள கடிதம்




ரஷ்யக்குடியரசுத் தலைவர் விளாடிமிர்புடினுக்கு ஒரு அழைப்பிதழ் ஒரு பள்ளிச்சிறுவர்சிறுமியர்களிடமிருந்து வந்தது. அந்தக் கடிதத்தில் இரு தவறுகள் இருப்பதை குடியரசுத் தலைவரின் அலுவலக அதிகாரிகள் கண்டு திகைத்தனர். ஒரு வாக்கிய முடிவில் முற்றுப்புள்ளி வைக்கப்படாமலும் அடுத்தவாக்கியம் ஆரம்பமாகும் போது முதலில் பெரிய எழுத்துடன் ஆரம்பமாகாமலும் இருந்ததே அதற்குக் காரணம். அதனால் அவர்கள் குடியரசுத்தலைவரிடம் அவ்விழாவிற்கு செல்லக்கூடாது எனக் கூறினார்கள். அது மட்டுமல்ல, அக்கடிதத்தை எழுதிய பெண் அன்னாபரோவாரோவா குடியரசுத் தலைவர் கையால் வெள்ளிப் பதக்கம் வாங்க வேண்டியவள். அவள் அனுப்பிய அழைப்பிதழில் தவறுகள் இருந்ததை அதிகாரிகள் கூறி அவளுக்குப் பதக்கம் கிடைக்காமல் செய்து விட்டார்கள். பள்ளி நிர்வாகம் இது பற்றி மேல் முறையீடு செய்துள்ளது.

# மாறுபட்ட லக்ஷ்மி பூஜை

கலிங்கம், உத்கல் எனப் பெயர் பெற்றுள்ள ஒரிஸா மாநிலத்தில் பல அழகிய பழங்காலக் கோவில்கள் உள்ளன. இங்கு நடக்கும் வழிபாடுகள் மற்ற இடங்களுக்கு மாறுபட்டவைகளாக உள்ளன. இவற்றில் லக்ஷ்மி பூஜையை முக்கியமாகக் குறிப்பிட வேண்டும். (மார்கழி மாதத்தில் ஒவ்வொரு வியாழக்கிழமையிலும் ஒரு பானையில் நெல்லை குவித்து அதை லக்ஷ்மி தேவியாக எண்ணி கும்பிடுவார்கள்.

இது பற்றி பூரி ஜகன்நாதர் ஆலயத்தை அடிப்படையாகக் கொண்ட பழங்கதை ஒன்று உள்ளது. ஜகன்நாதர் விஷ்ணு பகவானே. எனவே அவரது மனைவி லக்ஷ்மி தேவி. ஒரு மார்கழி மாதத்தில் லக்ஷ்மி தேவி தன் பக்தர்கள் தன்னை எவ்வாறு வழிபட்டு வருகிறார்கள் என்பதைக் காணப் புறப்பட்டுச் சென்றாள். கீழ்ச் சாதிப் பெண் ஸ்ரீயா என்பவள் செய்த பூஜையைக் கண்டு அவள் மகிழ்ந்து போனாள். அவ்வழியே பகவான் ஜகன்நாதரும் அவரது தமையனார் பலராமனும் வந்தார்கள். ஒரு தாழ்குலத்தவள் வீட்டில் அப்பெண்ணுடன் லக்ஷ்மிதேவி நெருங்கி நின்று கொண்டிருப்பதைக் கண்டு பலராமர், ஜகன்நாதரிடம் இதைக் கூறி லக்ஷ்மிதேவியை விட்டுப் பிரிந்து வாழும்படி வற்புறுத்தினார்.

ஜகன்நாதரும் தமையன் சொல்லைத் தட்ட முடியாமல் லக்ஷ்மிதேவியை விலக்கி வைத்தார். லக்ஷ்மி தேவியும் தன் ஆபரணங்களுடனும் பணியாட்களுடனும் கோவிலை விட்டு வெளியேறிவிட்டாள். ஆலயத்தில் உண்ணக் கூட எதுவும் இல்லாது போகவே ஜகன்நாதரும் பலராமரும் பிச்சை எடுக்கக் கிளம்பினார்கள். ஆனால் லக்ஷ்மி தேவியின் அருளை இழந்து விட்ட அவர்களுக்கு யாரும் எதுவும் கொடுக்கவில்லை.

முடிவில் லக்ஷ்மிதேவி இருந்த தாழ்குலப் பெண்ணின் வீட்டு வாசலில் அவர்கள் நின்று பிச்சை கேட்டார்கள். அப்போது லக்ஷ்மி தேவி அவர்கள் மீது இரக்கம் கொண்டு தானே உணவு தயாரித்துப் போட்டாள். அதைத் தயாரித்து அளித்தது லக்ஷ்மிதேவியே என்பது அவ்விருவருக்கும் தெரிந்து விட்டது. அவர்கள் லக்ஷ்மி தேவியிடம் மன்னிப்புக் கோரி மீண்டும் ஆலயத்திற்கு வந்து விடும்படி வேண்டவே லக்ஷ்மி தேவியும் ஆலயத்திற்குத் திரும்ப வந்தாள். இது மார்கழி மாதத்தில் நடக்கும் ஆலய விழாக்களில் நினைவுபடுத்தப் பட்டு வருகிறது.




* வடஇந்தியாவில் தீபாவளியின் போது லக்ஷ்மிபூஜை செய்யப்படுகிறது. ஒரிஸாவிலோ டிசம்பர், ஜனவரியில் தான் லக்ஷ்மி பூஜை நடக்கிறது.

வேதாளம் சொல்லும் கதை

# வாய்ச் சொல் வீரர்கள்!

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி, அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின் அவன் கீழே இறங்கி, அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இந்த பயங்கர நள்ளிரவில் நீ இப்படித் தொடர்ந்து முயன்று கொண்டிருப்பதைப் பார்த்தால் நீ உணர்ச்சி வசப்பட்டு யாருக்கோ வாக்குக் கொடுத்திருப்பாயோ என்ற சந்தேகம் ஏற்படுகிறது. உணர்ச்சி வசப்படுபவர்கள் தாம் கூறியபடி நடந்து விடுவதில்லை. இதை விளக்க இரு அரச



குமாரர்களின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்லலாயிற்று.

''சண்டிபுரச்சக்கரவர்த்திக்கு அடங்கிய சிற்றரசர்கள் சந்தனபுர அரசனும், பிரம்மபுர மன்னும் ஆவர். இந்த இரு சிற்றரசர்களின் நாடுகள் அடுத்தடுத்துள்ள அண்டை நாடுகள். சந்தனபுர மன்னன் தன் மகள் சித்திரலேகாவை அருமை பெருமையாக வளர்த்து, ஒரு இளவரசன் கற்க வேண்டிய போர்க்கலைகளையும் கற்பித்தான். அவளும் அவற்றில் நன்கு தேர்ச்சி பெற்றாள்.

ஒரு முறை சித்திரலேகா காட்டிற்கு வேட்டையாடச்சென்றபோது அங்குள்ள வேடர் தலைவன் ஒரு அழகிய வெள்ளைக் குதிரைக் குட்டியை அவளுக்குப் பரிசாக அளித்தான். அவளும் அதனை அரண்மனைக்குக் கொண்டு வந்து தன் கண்காணிப் பிலேயே வளர்த்து, அழகிய, வலுவான குதிரையாக வளர்த்து விட்டாள். அதற்கு அழகிய கடிவாளமும், வேலைப் பாடுடன் கூடிய சேணமும் போட்டு அலங்கரிக்கப்பட்டது. அதனால் அதனைப் பார்த்தவர்களெல்லாம் வியந்து அதனைப் பாராட்டினார்கள்.

சண்டிபுர மக்கள் சக்கரவர்த்தியிடம் எல்லைப்புற கிராமங்களில் காட்டு யானைகள்கூட்டமாக வந்து வயல்களில் விளையும் பயிர்களை அழிப்பதாயும், அவற்றை விரட்டித் தம்மைக் காக்க வேண்டுமென்றும் முறையிட்டார்கள். சக்கரவர்த்தியும்தன்மகன் அபயசேனனை சில வீரர்களுடன் யானைகளை விரட்டி யடிக்கஎல்லைப்பகுதிக்கு அனுப்பினான். அவனும் யானைகளை அடித்துத் துரத்தி காட்டிற்குள்விரட்டினான்.

மறுநாள் அபயசேனன் தன் வீரர் களுடன் எல்லையை ஒட்டி இருந்த சந்தனபுரியை அடைந்தான். சிற்றரசன் சந்தனசேனனும் அவனைத் தக்க விதமாய் உபசரித்து, அவன் தங்க ஏற்பாடு களையும் செய்தான். அப்போது சித்திரலே காவைக் கண்ட அபயசேனன் பிரமித்துப் போனான். அந்தப் பேரழகி தன் மனைவியாகிப் பிறகு பட்டத்து ராணி யானால் எவ்வளவு நேர்த்தியாக இருக்கும் என்று அவன் எண்ணமிடலானான்.

சற்று நேரத்திற்குப்பின் குதிரைலாய யத்தில் கட்டப்பட்டிருந்த வெள்ளைக்

குதிரையை அவன் கண்டான். உடனே அவன் சந்தனசேனனிடம் ''ஆகா! இந்த வெள்ளைக் குதிரைதான் எவ்வளவு அழகாக உள்ளது என்றான்'' சற்று அதிகாரக் குரலில். அப்போது அவர்களோடு இருந்த சித்திரலேகா ''இளவரசே! இதை நான் என் கண்காணிப்பில் வளர்த்தேன். தாங்கள் இதை விரும்புவதால் என் காணிக்கையாகக் கருதி ஏற்றுக் கொள்ளுங்கள்'' என்றாள். அபயசேனனும் அக்குதிரையுடன் சண்டிபுரத்திற்குச் சென்றான்.

அந்த ஆண்டு நவராத்திரி விழாவிற்கு சந்தனபுர மன்னனைத் தன் நாட்டிற்கு வரும்படி அழைப்பு விட பிரம்மபுர மன்னன் தன் மகன் பிரம்மசேனனை சந்தனபுரத்திற்கு அனுப்பினான். அவனை அனுப்ப வேறொரு காரணமும் இருந்தது. பிரம்மசேனனும் சித்திரலேகாவும் ஒருவரை மற்றவர் விரும்பினார்கள். இது அவர்களது பெற்றோர்களுக்கும் தெரியும். எனவேதான் பிரம்மசேனன் சித்திரலேகாவைக் கண்டு பேசி மகிழ்ந்து வரட்டும் என எண்ணியே பிரம்மபுர மன்னன் தன் மகனைச் சந்தனபுரத்திற்கு அனுப்பினான்.

பிரம்மசேனன் சித்திரலேகாவைச் சந்தித்தான். அப்போது அவள் தன் வெள்ளைக் குதிரையைச் சக்கரவர்த்தியின் மகன் அபயசேனனுக்குக் கொடுக்க வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டதைக் கூறி ''எனக்கு அக்குதிரையைக் கொடுக்கவே மனமில்லை. நம்மை விட பலமிக்க சக்கரவர்த்தியின் மகன் கேட்கிறானே என்பதாலும், கொடுக்க மறுத்தால் என்ன



விபரீதம் விளையுமோ என எண்ணியே அதனை அவனுக்குக் காணிக்கையாகக் கொடுத்து விட்டேன்'' என்றாள். பிரம்மசேனனும் ''ஆமாம். நாம் சிற்றரசர்கள். அவன் தந்தை சக்கரவர்த்தி. எனவே, அவன் கேட்பதைக் கொடுத்து விட்டால் நமக்கு ஆபத்து எதுவும் வராது. இனி அக்குதிரை பற்றி எண்ணி வருந்தாதே'' என்றான். அதன்பிறகு இரண்டொரு நாட்களுக்குப் பின் அவன் தன் நாட்டிற்குச் சென்றான்.

பிரம்மசேனன் தன் நாட்டிற்குப் போனபோது பழங்காலத்து அம்மன் கோவில் மதிலை இடித்துப் புதிதாகக் கட்டிக் கொண்டிருந்தார்கள். ஓரிடத்தில் சுவரை இடித்து புது அஸ்திவாரம் போடக் குழி தோண்டிய போது அங்கு



அதைக் கண்ட பிரம்மபுர மன்னன் திகைக்கவே இளவரசன் பிரம்மசேனன் ''தந்தையே! நாம் நாட்டை முதலில் காக்க வேண்டும். எனவே நீலக் கல்லை சக்கரவர்த்திக்குக் கொடுத்து விடலாம்'' என்றான். அந்த மன்னனும் எதுவும் பேசாமல் தலையை அசைக்கவே பிரம்மசேனனே அந்த நீலக்கல்லை எடுத்துக் கொண்டு சண்டிபுரத்திற்குப் போய் சக்கரவர்த்தியிடம் கொடுத்து விட்டுவந்தான்.

பிரம்மபுரத்தில் நவராத்திரி விழா ஆரம்பமாகியது. அதற்கு சந்தனபுர மன்னனும், அரசியும், இளவரசி சித்திரலேகாவும் வந்தனர். விழாவின் கடைசி நாளன்று சக்கரவர்த்தியின் மகன் அபயசேனனும் வந்தான். அன்று மஞ்சள் நீராட்டுவிழா. அரண்மனையின் முன்னால் பெரிய தொட்டியில் மஞ்சள் கரைக்கப்பட்ட நீர் நிரப்பப்பட்டிருந்தது. பிரம்மசேனன் ஒரு தங்கக் குடம் நிறைய மஞ்சள் நீரை நிரப்பிச் சித்திரலேகா மீது ஊற்றினான். அவளும் பிரம்மசேனனின் கையிலிருந்த குடத்தைப் பிடுங்கி அதில் மஞ்சள் நீரை நிரப்பிப் பிரம்மசேனனின் மீது ஊற்றிப் பலமாகச் சிரித்தாள்.

இதைக் கண்டு அபயசேனன் பொறாமையும், ஆத்திரமும் கொண்டு சந்தனபுர மன்னனருகே போய் ''அரசே! வரும் கார்த்திகை சுக்லபக்ஷ தசமியன்று எனக்குப் பட்டாபிஷேகம் நடக்கப் போகிறது. அதே முகூர்த்தத்தில் நீங்கள் உங்கள் மகள் சித்திரலேகாவை எனக்குத் திருமணம் செய்து வைக்க வேண்டும்.

பளபளவென மின்னிக் கொண்டிருந்த நீல வைரக் கல் கிடைத்தது. பிரம்மபுர மன்னன் அதை ஒரு தங்கக் கிரீடத்தில் பதித்து அம்மனுக்கு அர்ப்பணிக்க எண்ணி இருந்தான்.

அந்த நீலக்கல் கிடைத்த செய்தி சக்கரவர்த்தியின் மகனான அபயசிம்ம னுக்குஎட்டியது. தான்விரைவிலேயேதன் தந்தைக்குப் பின் சக்கரவர்த்தி ஆகப் போவதால் பிரம்மபுரத்தில் கிடைத்த நீலக்கல்லைதான் அடைந்து அதைத் தன் மகுடத்தில் பதித்து வைத்துக் கொள்ள வேண்டுமெனஆசைப்பட்டான். அதனால் நீலக்கல் உடனே சக்கரவர்த்தியிடம் ஒப்படைக்கப்பட வேண்டும் என்று பிரம்மபுர மன்னனுக்குக் கட்டளை அனுப்பப்பட்டது.

தெரிந்ததா?'' என்று அதிகார தோரணையில் கூறினான். அதைக் கேட்ட சந்தனபுர மன்னன் என்ன செய்வதெனத் திகைக்கலானான்.

மன்னன் பதில் ஏதுவும் கூறாது இருந்தது கண்டு அபயசேனன் கோபமாக ''நீங்கள் உங்கள் மகளை எனக்கு விவாகம் செய்து வைக்காவிட்டால் அவளை என் பட்டத்து ராணியாக்கிக் கொள்ள எனக்கு வழி தெரியும்'' என்றான். அதைச் சற்று தூரத்தில் நின்றிருந்த பிரம்மசேனன் கேட்டுவிட்டு சித்திரலேகாவின் தந்தையை அணுகினான். அவளது தந்தையோ எதுவும் கூறாமல் நின்றான்.



அப்போது அபயசேனன் சித்திரலேகாவைப் பார்த்து ''நீ விரைவில் என் மனைவியாகி பட்டத்து ராணி ஆகப் போகிறாய். அதனால் தான் உன் தந்தை மலைத்துப் போய் விட்டார்'' என்று கூறி ஏளனச்சிரிப்பு சிரித்தான். அது கேட்டு சித்திரலேகா ''இளவரசே! இந்த விவாகத்தில் எனக்கு கொஞ்சமும் விருப்பமில்லை. நான் வேறொருவரை மணக்க வெகு நாட்களுக்கு முன்பே தீர்மானித்து விட்டேன்'' என்றாள். அதைக் கேட்ட அபயசேனன் ''ஓ! இந்த பிரம்ம சேனனையா மணக்கப் போகிறாய்? இவன் என் சிற்றரசனின் மகன். உன் தந்தையும் என் தந்தையின் சிற்றரசனே. நாளையே என் தந்தையிடம் சொல்லி இரு நாடுகள் மீதும் படை எடுத்துத் தாக்கச் சொல்லப் போகிறேன். இந்த பிரம்மசேனனைச் சிறைப் பிடித்து இவனைத் தூக்கில் போடுவேன். உன்னைக் கைப்பற்றி மணந்து கொள்வேன். தெரிந்ததா?'' என்றான்.

அப்போது பிரம்மசேனன் குறுக்கிட்டு ''இளவரசே! உணர்ச்சி வசப்படாதீர்கள். எங்களது விவாகத்திற்கு எங்கள் பெற்றோர்களின் ஆசிகள் உண்டு. நீங்கள் உங்கள் ஆசையை நிறைவேற்றிக் கொள்ள எங்கள் நாடுகளின் மீது படை எடுப்பது முறையல்ல'' என்று பணிவுடன் கூறினான். அப்போது அபயசேனன் மேலும் கோபம் கொண்டு ''ஏய்! விரைவில் சக்கரவர்த்தியாகப் போகும் என்னிடம் பேசும் முறை இதுவா?'' என்று கத்தினான்.

அப்போது பிரம்மசேனன் தன் வாளின் பிடி மீது கை வைத்து ''இளவரசே! இது நம் சொந்தப் பிரச்சினை. இதனைத் தீர்த்துக்

கொள்ள நாம் இருவரும் வாட் போர் புரிவோம். அதில் உயிர் தப்பியவர் சித்திரலேகாவை மணந்து கொள்ளட்டும். அப்போது நம் மூன்று நாடுகளிலும் போர் பற்றிய பயம் ஏற்படாது. உயிர்சேதமும் பொருட்சேதமும் ஏற்படாது. உம், உங்கள் வாளை எடுத்து என்னுடன் சண்டையிட வாருங்கள்'' என்று கம்பீரமாகக்கூறினான்.

அதைக் கேட்ட அபயசேனன் திகைத்துப் போனான். பிறகு அமைதியாக ''பிரம்மபுர இளவரசே! நம் இருவரிடையே வாட் போர் எதற்கு? நீங்கள் சித்திரலேகாவை மணந்து கொண்டு சுகமாக வாழுங்கள். நான் இப்படிப் பண்பற்ற முறையில் பேசி நடந்து கொண்டதற்கு என்னை நீங்கள் இருவரும் மன்னியுங்கள்'' என்று வேண்டினான்.

வேதாளம் இக் கதையைக் கூறி ''வெள்ளைக் குதிரையை அபயசேனன் கேட்டதும் சித்திரலேகா அதை அவனுக்குக் கொடுத்தாள். பிரம்மசேனனும் நீலக் கல் கேட்கப்பட்டதும் அபயசேனனின் தந்தையிடம் கொடுத்தான். இதனால் அவர்கள் அபயசேனனிடம் பயப்பட்டார்கள் என்று தெரிகிறது ஆனால் திருமணம் என்றதும் சித்திரலேகா மறுத்தாள். பிரம்மசேனனே அபயசேனனுடன் வாட் போர் புரியத் தயாரானான். அப்போது அபயசேனன் பணிந்து போய் பிரம்மசேனனே சித்திரலேகாவை மணக்கட்டும் என்றானே. இந்த இரு அரசகுமாரர்களும் வாய்ச்சொல் வீரர்கள் தானா? இக் கேள்விக்கு சரியான பதில் கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''தம் தனிப்பட்ட விருப்பத்தால் மூன்று நாடுகளுக்கு நாசம் ஏற்படும் என்பதை இரு அரசகுமாரர்களும் உணர்ந்து உண்மை நிலையின் அடிப்படையில் நடக்கட்டும் என எண்ணியதால்தான் எல்லாம் நல்ல விதமாக முடிந்தது'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே, அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக்கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.





# திருடனின் தன்மானம்!

வேலைப்பன் ஒரு தொழிலாளி. தினமும் கிடைக்கும் கூலியைக் குடிப்ப திலும், சூதாட்டத்திலும் செலவழித்து விடுவதால் அவனது குடும்பம் அரை வயிற்றுச் சாப்பாட்டிற்கே தாளம் போட்டது. அவனது மனைவி பொன்னாயி ஊரில் பலரிடம் அவ்வப் போது கடன் வாங்கிக் குடும்பத்தை நிர்வகித்து வந்தாள்.

குடிமிகுதியால் வேலப்பனின் உடல் நலம் கெட்டு கைகால்கள் சோர்ந்துபோய் அவன் ஒரு நாள் படுத்தபடுக்கையாகக் கிடந்தான். பொன்னாயி பயந்துபோய் வைத்தியரிடம் ஓடி தன் கணவனைப் பார்த்துவைத்தியம் செய்யும்படி வேண்டி னாள். அவரோ, பணம் கொடுத்தால் தான் வரமுடியும் என்று கூறிவிட்டார். பொன்னாயி தனக்குத் தெரிந்த பலரிடம் பணம்கடன் கேட்டுப் பார்த்தாள். யாரும் பணம்கொடுக்கவில்லை.

அவ்வூருக்குப் புதிதாக பரமேஸ் வரன் என்ற பணக்காரர் வந்திருந்தார் அவர்வயல்களையும், தோப்புகளையும் விலைக்குவாங்கி, ஏழைஎளியவர்களுக்கு வேலை வாய்ப்புகளை அளித்து, தயாள குணமுள்ளவர் என்ற பெயர் பெற்றுவிட் டார். பொன்னாயி அவரிடம் போய்த் தன்கணவனைப்பற்றிக் கூறி தனக்கு உதவுமாறு வேண்டினாள்.

அவரும்சற்று யோசித்து "இதோ பார்! இப்போது உனக்குப்பணம் கொடுக்கி றேன். ஆனால், உன்கணவன் குண மடைந்த பின் மூன்று ஆண்டுகளுக்கு நான் சொல்கிறபடியெல்லாம் கேட்டு என்னிடம் வேலை செய்வான் என்று நீ பத்திரம் எழுதிக் கையொப்பமிட்டுக் கொடுக்கவேண்டும்" என்றார். பொன்னா யியும் அவ்வாறே பத்திரம் எழுதிக்

சிவனார் செல்வன்



கொடுத்துவிட்டு அவரிடமிருந்து பணத்தை வாங்கிக் கொண்டாள். பிறகு வைத்தியரை அழைத்து வந்து தன் கணவனுக்கு வைத்தியம் செய்யச் சொல்லி அவள் அவருக்குப் பணம் கொடுத்தாள். வேலப்பனும் ஒரு வாரத்தில் உடல் தேறி குணம் அடைந்தான்.

பொன்னாயி வேலப்பனை அழைத்துக் கொண்டு பரமேஸ்வரனைப் போய்ப் பார்த்தாள். வேலப்பனும் அவருக்கு நன்றி செலுத்திவிட்டு அங்கிருந்து போகத் திரும்பினான். அப்போது பரமேஸ்வரன் ''எங்கே போகிறாய்? உன் மனைவி எழுதிக் கொடுத்த பத்திரத்தின் படி மூன்று ஆண்டுகள் என்னிடம் நீ வேலை செய்தாக வேண்டும்'' என்றார். அப்போது வேலப்பனைச் சுற்றி நான்கு முரட்டு மனிதர்கள் வந்து நின்று கொண்டார்கள்.

தான் தப்ப வழியில்லை எனக்கண்ட வேலப்பன் அவர் கூறியபடி நடப்பதாகக் கூறினான். பரமேஸ்வரனும் ''நீ சிறைச் சாலையில் கைதிகள் அணியும் உடைகளைத்தான் அணியவேண்டும். காலையில் உனக்குப் பழைய சோறுதான் கொடுக்கப்படும். அதை உண்ட பின் நீ நான்குமணி நேரம் வேலை செய்யவேண்டும். உன் மனைவி மதிய உணவு கொண்டுவருவாள். அதை உண்டபின் சற்று இளைப்பாறி மீண்டும் வேலை செய்யத் தொடங்கி நான்குமணிநேரம் வேலை செய்து விட்டு வீட்டிற்குப் போகலாம். இரவுப் பொழுதை உன் வீட்டில் கழித்து விட்டு மறு நாள் காலை வேலை செய்ய ஏழுமணிக்குள் இங்குவந்துவிட வேண்டும். தெரிந்ததா?'' என்றார். வேலப்பனும் தன் மனைவி எழுதிக் கொடுத்த பத்திரப்படி பரமேஸ்வரனிடம் வேலைசெய்யலானான்.

ஒரு வாரத்திற்கு அவன் ஒழுங்காக தினமும் வேலை செய்தபோதிலும் அவன் தான் சிறையிலடைக்கப்பட்ட கைதிபோல இருப்பதாகத்தான் உணர்ந்தான். அதை தினமும் இரவில் தன் மனைவியிடம் கூறி முதலில் தான் அணியும் சிறைக்கைதி உடைகளை மாற்ற வேண்டுமென்றும், தான் அணியும் உடை தன்மானத்தைப் பாதிக்கிறது என்றும் கூறி வேதனைப்படலானான்.

தன் கணவனின் மனவேதனையைக் கண்ட பொன்னாயி பரமேஸ்வரனிடம் போய்த் தன் கணவனின் மனவேதனையைக் கூறி, அவன் அணியும் உடைகளை மாற்றும்படி வேண்டினாள். ஆனால் பரமேஸ்வரனோ, ''அதெல்லாம் முடியாது. பத்திரத்தில் எழுதியுள்ள படி

அவன் நான் சொல்கிறபடித்தான் மூன்று ஆண்டுகாலத்திற்கு நடந்தாக வேண்டும்'' என்று கூறிவிட்டார்.

பொன்னாயி அது கேட்டுத் திகைத்து ஊர் கிராம அதிகாரியிடம் முறையிட்டாள். அவரும் பரமேஸ்வரனை வரச் சொல்லி அவரிடம் ''நீங்கள் இந்தப் பொன்னாயியின் கணவன் வேலப்பனை உங்களிடம் வேலைக்கு அமர்த்திக் கொண்டு அவனை ஒரு கொத்தடிமை போல நடத்துகிறீர்களாமே. அவனது விருப்பப்படி ஆடைகளைக் கூட அணிய விடாமல் சிறைச்சாலைக் கைதி அணியும் ஆடைகளைத்தான் அணியவேண்டுமென்று கட்டாயப்படுத்துகிறீர்களாமே. அவன் என்ன திருடியாவிட்டான் அம்மாதிரி ஆடைகளை அணிய? அவனுக்கும் தன்மானம் என்று ஒன்று இருக்கிறதல்லவா? அவன் உங்களிடம் வேலை மட்டும் தான் செய்ய வந்தானேயொழிய அவனது மற்றவிருப்பங்களை எல்லாம் தடை செய்ய நீங்கள் யார்? உங்களுக்கு அந்த உரிமை ஏது?'' என்று கேட்டார்.

பரமேஸ்வரனும் சிரித்துக்கொண்டே ''வேலப்பன் திருடியவன்தான். மேலும் அவன் விருப்பப்படி மூன்று ஆண்டுகளுக்கு நடக்க முடியாது. அந்தக் காலம் முடியும் வரை நான் சொல்கிறபடிதான் வேலப்பன் நடப்பான் என உறுதி கூறி அவன் மனைவி பொன்னாயி எனக்குப் பத்திரம் எழுதிக் கொடுத்திருக்கிறாள். அதனால் ஆடைகளை அவன் எவ்வாறு அணிய வேண்டும் என்று கூற எனக்கு உரிமை உண்டு'' என்றார்.

கிராம அதிகாரியும் ''பத்திரம் சரிதான். ஆனால் அவனுக்கும் தன்மானம் என்று ஒன்று இருக்கிறதே. சிறைக்கைதிபோல ஆடை அணிவதால் அவன் மனம் வேதனைப்படுகிறதே. இதைத்தான் பொன்னாயியும் என்னிடம் கூறி முறையிடுகிறாள். திருடனைப் போலத் தன் கணவன் ஆடை அணிகிறானே என்று



அவள் மனம் குமுறுகிறாள்'' என்றாள்.

பரமேஸ்வரனும் ''நீங்கள் சற்று யோசித்துப்பாருங்கள். இந்த வேலப்பன் திருடனே. இவன் சம்பாதிக்கும் பணத்தால் தன் குடும்பத்தில் தாய்தந்தையரையும், மனைவி மக்களையும் காப்பாற்ற வேண்டியது இவன் கடமை. அதைச் செய்யாமல் இவன் தான் சம்பாதித்ததை எல்லாம் சுயநலம் கொண்டு குடியிலும், சூதாட்டத்திலும் செலவு செய்து வந்தான். அதனால் இவன் பிறர் பணத்தை எடுத்துக் கொண்டது திருடுவது என்றுதானே ஆகிறது. அந்தப் பணம் இல்லாமல் இந்தப் பொன்னாயி த்வித்து ஊராரிடம் கடன் வாங்கி ஏளனத்திற்கு ஆளானபோது இந்த வேலப்பனின் தன்மான உணர்ச்சி எங்கே போயிற்று? இவன் என்னிடம் இப்படி வேலை செய்வதால் குடிக்க முடிவதில்லை. சூதாட முடியவில்லை. இரவில் தன் குடும்பத்தவருடன் பொழுதைக் கழிக்கிறான். இவனது ஊதியத்தை மாதா மாதம் நான் இவனது மனைவியிடம் தான் கொடுக்கிறேன். அதனால் அவனால் தன் குடும்பத்திற்கு வயிறு நிறைய உணவளித்துக் கொஞ்சம் பணத்தை சேமிக்கவும் முடிகிறது. இப்படியே நான்கைந்து ஆண்டுகள் இருந்தால் பணம் சேர்ந்து நிலம் வாங்கி விவசாயம் செய்து இக்குடும்பம் சுகமாக வாழமுடியும். இப்போது சொல்லுங்கள். இந்த வேலப்பன் திருடன்தானே, இவனைத் திருத்தும் உரிமை சமுதாயத்தில் ஒருவனான எனக்கு இல்லையா?'' என்று கேட்டார்.

அதைக் கேட்ட பொன்னாயி பரமேஸ்வரனின் கால்களில் விழுந்து ''ஐயா! இவ்வளவு உயரிய பரந்த நோக்கமுள்ள தங்கள் மீது புகார் கொடுத்ததற்கு வெட்கப்படுகிறேன். என்னை மன்னித்து விடுங்கள்'' என்றாள். கிராம அதிகாரியும் மரியாதையுடன் எழுந்து வணங்கினார்.

இதன் பிறகு வேலப்பன் திருந்தி விட்டான். குடியையும் சூதாட்டத்தையும் விட்டுவிட்டு பொன்னாயி சேர்த்து வைத்த பணத்தால் நிலத்தை வாங்கி அவன் விவசாயம் செய்து குடும்பத்தை சுகமுறச் செய்து வந்தான்.






10

(கௌண்டினிய நாட்டு இளவரசனுக்கு ஒரு தங்க சிம்மாசனம் கிடைக்கவே அதில் அமர அவன் முதல் படிக்கட்டில் காலை வைத்தான். அப்போது அதிலிருந்த பதுமை ஒரு கதையைக் கூறி அது பற்றிக் கேள்விகள் கேட்க, விஜயதத்தன் சரியான பதிலைக் கூறியதும் அடுத்த படியில் கால்வைக்க அனுமதித்தது. இதுபோல் இரண்டாவது படிப்பதுமையும் கதை கூறி கேள்விகள் கேட்டு சரியான பதில் கிடைத்ததும் அவனை அடுத்தபடிக்குச் செல்ல அனுமதித்தது. இது போல மூன்றாவது படிப்பதுமையும் கதை சொல்லலாயிற்று. அப்போது)

மணிகர்ணன் கூறியதை முழுவதும் கவனமாகக் கேட்ட நியாய வர்த்தனன் அடுத்து ரத்தின குப்தனிடம் அவன் என்ன சொல்ல விரும்புகிறான் என்று கேட்டான்.

ரத்தின குப்தனும் எழுந்து நின்று மன்னனை வணங்கி ''அரசே! இந்நாட்டு கௌரவமான வர்த்தகர்களில் நானும் ஒருவன் என்பது தங்களுக்குத் தெரிந்ததே. எனது நேர்மை யாவரும் அறிந்ததே. பணத்திற்காக நான் ஏன் ஒரு அயல்நாட்டு வியாபாரியை ஏமாற்ற வேண்டும்? நான் அவனுக்கு இரண்டு லட்சம் கொடுத்தே அவனது சரக்குகளை முழுவதும் வாங்கிக் கொண்டேன். இதுதான் நான் தங்களிடம் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த இளைஞனின் கபடச் செயலால் இன்று தலை குனிந்து உங்கள் முன் நிற்க வேண்டியுள்ளது'' என்றான்.



நியாயவர்த்தனனும் அது கேட்டுப் புன்னகை புரிந்து ''ரத்தினகுப்தா''! நாம் பகவான் கிருஷ்ணரையே வெண்ணெய் திருடி எனக் கூறு கிறோம். அதனால் அவர் மதிப்பு குறைந்து விடவில்லையே. எனவே விதி நடத்தும் விளையாட்டிற்கு நாம் கட்டுப்பட்டவர்களே. அது சரி, உன் ஒரே மகனான ஹேமகுப்தன் எப்படி இருக்கிறான்?'' என்று கேட்டான். அதைக் கேட்டதுமே ரத்தினகுப்தனின் முகம் கருத்து சுருங்கியது. ஆயினும் ''நலமாகத்தான் இருக்கிறான்'' என்று தலை குனிந்தவாறே கூறினான்.

அப்போது நியாயவர்த்தனன் ''ரத்தினகுப்தா! நீ ஒன்றும் இப்போது குற்றவாளி என இச்சபையில் நிற்க வில்லை. நீ சற்றுத் தனியாக உட்கார் ந்து கடவுளை தியானம் செய். கடவுள் நியாய அநியாயங்களைச் சீர்தூக்கிப் பார்ப்பவர். அவரிட மிருந்து யாரும் தப்ப முடியாது'' எனக் கூறி தன் வீரர்களுக்குச் சைகை செய்தான். அவர்களும் ரத்தின குப்தனை அழைத்துச் சென்றனர். அப்போது மன்னன் மணிகர்ணனி டம் ''மணிகர்ணா! ரத்தினகுப்தன் பெரிய மனிதன். அவன் தன் மகனைப் போலவே உன்னையும் கருதுபவன். அதனால் நீ வேதனைப் படாமல் சற்று நேரம் அங்கு உட்கார்ந்திரு'' என்றான்.

இதன்பிறகு மன்னன் மூன்றாவது வழக்கை விசாரித்தான். அது ஒரு தாய்க்கும் மகனுக்குமிடையேயான வழக்கு. முதலில் மன்னன் மகனிடம் விஷயம் என்ன என்று கேட்கவே அவன் கூறலானான்'' என் மனைவிக்கு வேலைகளை செய்ய அவ்வளவாகத் தெரியாது. கள்ளங் கபடமற்ற அப்பாவி. அவள் எதையும் சற்று நிதானமாகக் கூறினால் அந்த வேலையைச் சரியாக செய்து விடுவாள். ஆனால் இந்த என் கிழத்தாயாரோ எதற்கும் குற்றம் சொல்லி அவளைத் திட்டிக் கொண்டே இருக்கிறாள். இரண்டு நாட்களுக்கு ஒரு தடவை அடித்தும் விடுகிறாள். அவளை அடிக்காதே, திட்டாதே என்று எவ்வளவு சொன்னாலும் என் தாய் கேட்பதே இல்லை. நாங்கள் தனியாகப் போகிறோம் என்றாலும் அதற்கும் சம்மதிக்க மாட்டாளாம். தனிக் குடித்தனம் போனால் கிணற்றில் விழுந்து உயிரை விடுவதாக

மிரட்டுகிறாள்: கிராம அதிகாரியிடம் நான் முறையிட்டேன். அவர்தான் உங்களிடம் வழக்கைக் கூறச் சொன்னார்.''

அப்போது அவனது தாய் ''இது என்ன நியாயம்? மருமகள் சரியாக இல்லாவிட்டால் மாமியாருக்கு அவளை அடிக்கவும் திட்டவும் உரிமை இல்லையா? இவர்கள் வாய் திறக்காமல் என்னுடன் இருந்தாக வேண்டும். இல்லாவிட்டால் நான் கிணற்றில் விழுந்து சாகத்தான் சாவேன்'' என்று காளிபோல் கத்தினாள். அது கேட்டு மன்னன் அங்கிருந்த இரு வீரர்களிடம் ''இந்த கிழவியின் கை கால்களைக்கட்டி, வாயில்துணியை அடைத்து, மயானத்தை அடுத்துள்ள இறங்கு கிணறில் தூக்கி எறியுங்கள்'' என்று கூறினான்.

மன்னனின் கட்டளையைக் கேட்டதும் தாயும் மகனும் திடுக்கிட்டுப் போனார்கள். தாய் தன்னைப் பிடிக்க வந்த வீரர்களிடம் அகப்படாமல் அங்கும் இங்கும் ஓடலானாள். ''ஐயோ! என்னைக் கிணற்றில் தள்ளாதீர்கள். விட்டுவிடுங்கள்'' என்று கெஞ்சிக் கதறினாள். ஆனால் வீரர்களோ, அவளைப் பிடித்து இழுத்து வந்தார்கள். மன்னன் அவளைப் பார்த்து'' என்ன சொன்னாய்? கிணற்றில் விழப்போகிறாயா? வேண்டாம். அதைவிட நல்ல இடமான முதலைமடுவுக்குள் தள்ளச் சொல்கிறேன். திருப்திதானே'' என்று பயங்கரமாகச் சிரித்துக் கேட்டான்.

கிழவியோ ''வேண்டாம். இனிமேல் கிணற்றில் குதித்து விடுவேனென்று பயமுறுத்த மாட்டேன். என் மருமகளைத் திட்டமாட்டேன். அடிக்கவும் மாட்டேன். என்னை





விட்டுவிடுங்கள். நான் சொல்வதை நம்புங்கள்'' என்று அலறினாள். மன்னனோ ''நான் நம்பமாட்டேன். உன்னைச் சிறையில் அடைத்து தின மும் ஒரு வேளை சாப்பாடு மட்டும் போடச் சொல்லி, தினமும் ஐந்து சவுக்கடி கொடுக்க உத்திரவிடுகிறேன். மறுபடியும் கிணற்றில் விழுவதாகக் கூறினால் உன்னை முதலைக்கு இரையாகப் போடச் சொல்வேன்'' என்றான். வீரர்களும் அக்கிழவியைச் சிறைச்சாலைக்கு இழுத்துச் சென்றனர்.

அதைக் கண்ட கிழவியின் மகன் கண்ணீர் வடித்து ''அரசே! உண்மை யிலேயே என் தாயாரை முதலைக்கு இரையாகப்போட்டுவிடுவீர்களா?'' என்று கேட்டான். மன்னனும் ''பயப்படாதே. இரண்டு நாள் சிறையில் வைத்து சரியாக உணவு கொடுக்காமல் இப்படிப் பயமுறுத்தி னால் உன் தாயார் திருந்தி விடுவாள். அவள் விடுதலையாகி வந்து உன் மனைவியைத் திட்டினாலும் அதை லட்சியம் செய்யாதிருக்கும்படி சொல். எல்லாம் சரியாகிவிடும்'' என்றான். மகனும் அது கேட்டு மகிழ்ந்து மன்னனை வணங்கிவிட்டுச் சென்றான்.

இதற்குப்பின் மன்னன் சந்திரனை யும் வீரநந்தனையும் கூப்பிட்டு வீரநந்தனிடம் ''வீரநந்தா! இப் போது உன் ஆவேசம் சற்றுக் குறைந்திருக்குமே. இப்போது நன் றாக யோசித்துச் சொல். சந்திரனின் குடும்பம் சிக்கனமாக வாழ்ந்து உயர்ந்திருக்கிறது என்றும் உன் குடும்பம் வேலை செய்யாமல் இந்த நிலைக்குத் தாழ்ந்திருக்கிறது என்றும் ஒரு முறையாவது உன் மனம் எண்ணியது உண்டா, இல்லையா?'' என்று கேட்டான்.

வீரநந்தனும் ''அரசே! ஒரு முறை மட்டுமல்ல, பல முறைகள் அப்படி எண்ணியது உண்டு. என் மனைவி மக்களைக் கூட சோம்பேறிகளாக இருக்கக் கூடாது என்று பல தடவை களில் திட்டியும் இருக்கிறேன்'' என்றான். மன்னனும் ''ஆனால் திட்டியும் பயனில்லாததால் நீயும் அவர்களைப் போல ஆகிவிட்டாய். அது தானே விஷயம்?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டு ''அப்படி யானால் சந்திரன் கொடுத்த வாக்கைக் காப்பாற்றாமல் இருப்பதற்குப் பணம் காரணமல்ல என்பதை ஒப்புக்

கொள்கிறாயா?'' என்று கேட்டான்.

இக்கேள்விக்கு வேண்டாவெறுப் பாக ஒப்புக் கொள்வது போல வீரநந் தன் தலையை ஆட்டினான். அதை கவனித்த மன்னன் கடுமையாக ''வீரநந்தா! நீங்களெல்லாம் உடல் வளைய உழைத்து வேலை எதுவும் செய்யாமல் சோம்பேறிகளாக இருந்திருக்கிறீர்கள். அதனால் தான் சந்திரனின் சொத்தின் மேல் ஆசைப்பட்டு குறிவைத்திருக்கிறீர் கள். மேலும் தப்பெல்லாம் சந்திரனு டையதே என்று நிருபிக்கவும் முயல்கிறாய். இது தானே உண்மை?'' என்று கேட்டான்.

வீரநந்தனும் கண்களில் நீர்ததும்ப ''ஆம் அரசே. நாங்களெல்லாம் ஒரு வேலையும் செய்யாமல் சோம்பேறி களாக இருந்துவிட்டோம். இதற் கெல்லாம் காரணம் என் மனைவி தான். அவள் மகா சோம்பேறி'' என்றான். அப்போதும் மன்னன் அதே குரலில் ''வீரநந்தா! எல்லாத் தப்பும் உன் மனைவியுடையதே என்று அவள் தலையில் போடாதே. உன்னி டம் சோம்பல் என்பதே இல்லாதி ருந்தால் நீ உன் மனைவி சொற்படி நடந்திருப்பாயா? அவளை வேலை செய்ய வைத்து உன் வழிக்குக் கொண்டு வந்துதானே இருப்பாய்! சரி. நடந்ததென்னவோ நடந்து விட்டது. உனக்கு ஆறுநாள் கெடு தருகிறேன். இன்றைக்குச் சரியாக ஆறாவது நாளன்று நீயும் உன் மனைவி மக்களும் என் முன் வந்து நிற்க வேண்டும். விரைவில் பல ஆசிரியர் களும், நிபுணர்களும், தத்துவ



மேதைகளும் கூடிப் பேச இருக் கிறார்கள். அவர்களுக்கு எல்லா வசதிகளையும் நான் செய்து தர வேண்டும். அதற்கு நீ உன் வயல் விளைச்சலில் பாதியை உன் கிராம அதிகாரியிடம் ஒப்படைக்க வேண்டும். நிலமே இல்லாத நீ எப்படி விளைச்சலில் பாதியைக் கொடுக்க முடியும் என்று யோசிக் கிறாயா? உனக்கு பயிர் விளைவிப்ப தற்காக ஒரு ஏக்கர் நிலத்தை கொடுக் கும்படி உன் கிராம அதிகாரிக்கு கட்டளை பிறப்பிக்கிறேன். அந்த நிலத்தில் நீயும் உன் மனைவி மக்களும் சேர்ந்து உழைத்துப் பயிரிட வேண்டும். அதில் விளைவதில் பாதி உனக்கு. மற்றபாதி அரசாங்கத்திற்கு. தெரிந்ததா?'' என்றான்.



இவ்வாறு கூறியபின் மன்னன் சந்திரனைப் பார்த்து ''சந்திரா! உன் மகளின் விவாக விஷயம் உன் விருப்பத்தைப் பொறுத்ததுதான். ஆனாலும் ஒன்றைச் சொல்ல விரும்புகிறேன். வீரநந்தன் மிகவும் கெட்டவன் என்றாலும் உன் நண்பன் தானே. அவனது வாழ்க்கை சரியாக இல்லாமல் தாறுமாறாகிப் போவதைக் கண்டால் அதைத் திருத்தி நேர் படுத்த வேண்டியது உன் கடமை. அதனை இப்போதாவது நீ செய்தால் வீரநந்தனின் வாழ்க்கை சுகமயமாகும். உங்கள் தொடர்பு மேலும் வலுப்படும். ஒருமுறை ஒரு வாக்குக் கொடுத்துவிட்டால். அதனை எந்த நிலை ஏற்பட்டாலும் காக்க வேண்டும். அப்படிக் காக்காம லிருந்தால் அது தவறுதானே. வீரநந்தனின் குடும்பம் விவசாயத் தில் ஈடுபடவேண்டுமென நான் கட்டளை இட்டது. அவர்கள் செய்த தவறுக்கு நான் அளிக்கும் தண்டனை. எனவே அவர்கள் திருந்த நான் கொடுக்கும் வாய்ப்பு. இதனை நீயும் பயன்படுத்திக் கொண்டு உன் கடமையை உன் நண்பனுக்குச் செய்'' என்றான்.

மன்னன் இவ்வாறு கூறியது கேட்டு சந்திரன் மகிழ்ந்து போய் அவனை கைகூப்பி வணங்கி'' ''தாங்கள் கூறியபடியே செய்கி றேன். இதுவரை நான் வீரநந்தனின் குடும்பத்தை அலட்சியப்படுத் வந்தேனேயொழிய, அவர்களைத் திருத்தி நல்ல வழிக்குக் கொண்டு வரவேண்டும் என்ற எண்ணமே என் மனதில் ஏனோ எழவே இல்லை. இது பற்றி யோசிக்காதது என் தவறுதான். இத்தவறை நான் திருத்தி வீரநந்தனின் குடும்ப வாழ்க்கையை உயர் நிலைக்குக் கொண்டு வர முழுமனதுடன் நானும் முயல் வேன்'' என்றான். நீண்ட கால நோய்க்கு ஒருவன் ஒருவைத்தியரி டம் போய்க் கசப்பு மருந்தைக் உட் கொண்டு குணமடைந்து அதனால் கிடைக்கும் ஆனந்தத்தைத்தான் சந்திரனும் வீரநந்தனும் அனுபவித் தார்கள். இருவரும் மன்னனுக்கு நன்றி செலுத்தி விழுந்து வணங்கி விடைபெற்றுக் கொண்டு சென்றார்கள்.

இதன்பிறகு தனிமையில் விடப்

பட்ட ரத்தினகுப்தனை அழைத்து வரும்படி தன் வீரர்களிடம் கூறி னான். தியானத்தில் அமர்ந்திருந்த அவனை வீரர்கள் அழைத்துக் கொண்டு வந்தார்கள். அவனது முகம் வெளிறிப்போயிருந்ததை நியாய வர்த்தன மன்னனினருகே அமர்ந்தி ருந்த பௌமதேச இளவரசன் குமாரகேது கவனித்தான். நியாய வர்த்தனனும் அவ்விஷயத்தைக் குறிப்பிட்டு ''வணிகர் திலகமே! உங்களுக்கு உங்கள் மகனைப் பற்றிய பெரும் கவலை பற்றிக் கொண்டி ருப்பது நன்கு தெரிகிறது. கவலைப் படாதீர்கள். ஒரு சமயம் இந்த மணிகர்ணனின் தந்தை கூட, தன் மகனைப் பற்றி நீங்கள் கவலைப் படுவது போலவே கவலைப் பட்டு வேதனை அடைந்து கொண்டிருந் தார்'' எனக் கூறி விட்டு மணிகர்ணனைப்பார்த்து ''மணிகர்ணா! உன் தந்தைக்குச் சமமான இந்த ரத்தினகுப்தனை பத்திரமாக அழைத்துப் போய் இன்றைய நாள் முழுவதும் நன்றாக கவனித்துக் கொள். நாளைக் காலையில் நீ மட்டும் வந்து என்னைப் பார்'' என்றான்.

எந்த விசாரணையும் தீர்ப்பும் சொல்லாமல் இவ்வாறு தன்னையும் ரத்தினகுப்தனையும் மன்னன் அனுப்புவதை மணிகர்ணன் அவ்வ ளவாக ரசிக்கவில்லை. ஆயினும் ஒரு நாள் கழித்து வரச் சொல்லி இருக்கிறானே என ஆறுதல் அடைந்து மன்னனை வணங்கி விட்டு ரத்தினகுப்தனை அழைத்துக் கொண்டு சென்றான்.

ரத்தின குப்தனும் அரச அவையை விட்டுச் செல்லுமுன் மன்னனை வணங்கி ''அரசே! தங்களது தாராள மனப்பான்மைக்கு நான் என்றென் றும் கடன்பட்டிருக்கிறேன். என்னை மன்னித்து விடுங்கள்'' எனக் கூறி மணிகர்ணனோடு சேர்ந்து சென்றான்.

(அடுத்த இதழில் முடிவுறும்)



# மகிழ்ச்சியான தீபாவளி

தீபாவளி மீண்டும் வருகிறது. 'அம்புலிமாமா' இச் சந்தர்ப்பத்தில் சிறுவர் முதல் முதியோர் வரையாவருக்கும் தன் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறது. அன்றைய தினம் யாவர் முகமும் மலர்ந்து கண்களில் ஒளிவீச, இரவு பகலாகி எங்கும் வெளிச்சமாக உள்ளதைக் காண்கிறோம்.

நீங்கள் யாவரும் தீபாவளியை எப்படிக் கொண்டாடுவது, என்னென்ன வாங்குவது என்று பட்டியல் போட்டுக் கொண்டிருப்பீர்கள். துணிமணிகள், தின்பண்டங்கள், பட்டாசுகள் என்று பல பொருள்கள் கண்டிப்பாக இடம் பெறும். நீங்கள் தயாரிக்கும் பட்டியலோடு இந்தப் பட்டியலையும் இணைத்துக் கொள்ளுங்கள். இதில நீங்கள் செய்ய வேண்டியவையும் செய்யக் கூடாதவைகளும் உள்ளன.

## நீங்கள் செய்ய வேண்டியவை இவையே

✓ வெடி வெடிக்கும் போது பெரியவர்களைத் துணையாக வைத்துக் கொள்ளுங்கள்.

✓ வெடி வெடிக்கையில் கால்களில் செருப்புகளை அணியுங்கள். செருப்பில்லாமல் தெருவில் நடந்தால் பாதி எரிந்து கிடக்கும் பட்டாசுத் துண்டுகளை மிதித்து விடுவீர்கள். அதனால் கால் கொப்பளித்துவிடும்.

✓ வெடியைப் பற்ற வைக்க எரியும் ஊதுவத்தியைப் பயன்படுத்துங்கள். நெருப்பு குச்சிகளைப் பயன்படுத்தாதீர்கள்.

✓ வெடிக்கப்பட்ட வெடிகளை ஒன்றாக ஓரிடத்தில் சேர்த்து அக்கு வியலின் மீது தண்ணீர் கொட்ட வேண்டும். வெடித்த வெடிகள் நாலாபுறத்திலும் சிதறிக் கிடக்கக் கூடாது.

✓ வெடிகள் வெடிக்கும் போது ஒரு பக்கெட் தண்ணீரை அருகில் தயாராக வைத்திருங்கள்.

✓ உங்கள் சுற்றுப்புறங்களைப் பார்த்து வெடி வெடியுங்கள். நீங்கள் விடும் ராக்கெட், வெடிகள் சீறிப்பாய்ந்து அருகிலுள்ள குடிசைகளின் மேல் போய் விழாமல் பார்த்துக் கொள்ளுங்கள்.

## செய்யக் கூடாதவை

✓ வெடி வெடிக்க நெருப்புக் குச்சியைப் பயன்படுத்தக் கூடாது.

✓ வெடியைப் பற்ற வைத்து சுற்றிலும் எறிய கூடாது.

✓ வெடி வெடிக்கும் போது நைலான் அல்லது செயற்கை ஆடைகளை அணியக்கூடாது. பருத்தி ஆடைகளையோ அணியுங்கள்.

✓ வீட்டிற்குள் வெடி வெடிக்கக் கூடாது. வீட்டின் வெளிப்புறத்திலேயே எப்போதும் வெடி வெடியுங்கள்.

✓ மின்சாதனங்களான பியூஸ் பெட்டி, ட்ரான்ஸ்பார்மர் போன்றவற்றின் அருகே வெடி வெடிக்கக்கூடாது.

✓ கார்கள், லாரிகள், ஸ்கூட்டர்கள் போன்றவற்றினருகே வெடி வெடிக்கக் கூடாது. ஏனெனில் அவற்றிலுள்ள பெட்ரோல் எளிதில் தீப்பற்றிக் கொள்ளும்.

✓ குனிந்து கொண்டு வெடியைப் பற்ற வைக்கக்கூடாது. நேராக நின்று கையை வளைத்து வெடியைப் பற்ற வைப்பதால் கண்களிலும் முகத்திலும் அதனால் காயம் ஏற்படுவதிலிருந்து தப்பலாம்.



## எரிகாயங்களுக்கு முதலுதவி

தீபாவளி சமயத்தில் விபத்துக்களால் எரிகாயங்கள் ஏற்படுவது உண்டு. இவற்றால் வலி ஏற்படும். ஒரு வேளை உங்களுக்கு இம்மாதிரி எரிகாயம் ஏற்பட்டால் நீங்கள் செய்யவேண்டியது பின்வருமாறு.

எரிகாய மேற்பரப்பை தண்ணீரால் சுத்தம் செய்யுங்கள். காயத்தின் எரிச்சல்நிற்கும் வரை அதன்மீது தண்ணீர் ஊற்றிக் கொண்டே இருங்கள்.

எரிகாயம் மார்பிலோ அல்லது வயிற்றிலோ ஏற்பட்டிருந்தால் நீங்கள் அணிந்துள்ள ஆடைகளைக் களையவேண்டாம். காயம்பட்ட இடத்தை நீரில் நனைத்த பஞ்சால் ஒற்றுங்கள்.

காயப்பகுதியில் மோதிரம், வளையல், சங்கிலி போன்றவற்றை அணிந்திருந்தால் அவற்றை உடனே கழற்றிவிடுங்கள். இதனால் அவை காயத்தின் மீது படாமல் இருந்து வலி இல்லாது செய்யும்.

எரிகாயத்தில் களிம்பு போன்றவற்றை முதலில் தடவக்கூடாது. காயத்தின் களிம்பு இருந்தால் அதை சுத்தப்படுத்துவது சிரமமே.

வெடியிலிருந்து தீப்பொறி உங்கள் கண்களில் பட்டால் கண்ணிலிருந்து அதன் தூசி போகும் வரைக் கண்ணை அலம்புங்கள்.

சிறுகாயங்களுக்கும் கீறல்களுக்கும் கட்டுப்போட வேண்டியதில்லை. இவற்றின் மீது புரை ஏறாது தடுக்கும் களிம்பைத் தடவுங்கள். பெரிய காயங்களுக்குத்தான் நன்றாக சுத்தம் செய்தபின் கட்டு போட வேண்டிவரும்.

காயம் உலரும் போது பொறிதட்டினால் அதைப் பிய்த்து எடுக்கக்கூடாது. அவை தானே ஆறிமறைய விட்டு விடுங்கள்.

எரிகாயங்களை அலட்சியப்படுத்தாதீர்கள். உடனேயே அவற்றிற்கான சிகிச்சையைத் தொடங்குங்கள். உடனே உங்கள் குடும்ப டாக்டரிடம் காட்டி சிகிச்சை பெறுங்கள்.

எப்போதும் வருமுன் காப்பதே நல்லது என்பதற்கு இணங்க வெடிகளையோ மத்தாப்புகளையோ கையாளும் போது எச்சரிக்கையுடன் இருந்தால் மகிழ்ச்சிகரமான தீபாவளியை அனுபவிக்கலாம்.

மீண்டும் உங்களுக்கு தீபாவளி நல்வாழ்த்துக்கள்.



ஒரு உயரிய பண்பாட்டின் சம்பவங்கள்;

பரம்பரை பரம்பரையாய் சத்திய சோதனை:

## 9. என்றும் பதினாறு வயதுள்ள இளைஞன்



சோமநாதர் அறைக்குள் வந்தபோது அங்கிருந்த சேகர் ''தாத்தா! முனிவர்களில் இளைஞர்கூட உண்டோ?'' என்று கேட்டான். அவரும் ''ஆம். இருக்கிறார்கள். மார்க்கண்டேயர் என்பவர் ஒருவர். அவர் பரமபக்தர். அவரை எமனிடமிருந்து சிவபெருமானே காப்பாற்றினார் என்றொரு கதை உள்ளது. அது மிகவும் சுவாரசியமானது'' என்றார். சியாமளா அப்போது ''எமனிடமிருந்து சிவபிரானே காப்பாற்றினாரா? அதை விவரமாகக் சொல்லுங்கள்'' என்று குதூகலத்துடன் கேட்க சோமநாதரும் கதையைக் சொல்லலானார்.

''இது மார்க்கண்டேயரைப் பற்றி தமிழ்நாட்டில் பரம்பரை பரம்பரையாகக் கேட்கப்பட்டுச் சொல்லப்பட்ட கதை. வெகுகாலத்திற்கு முன் இக்கதையை ஒவ்வொருவராகச் சொல்லி வந்தபோது தமக்குத் தோன்றியதைக் கூடச் சேர்த்துச் சொல்லியும் இருக்கலாம். எப்படி இருந்தாலும், அதிலிருந்து கிடைக்கும் படிப்பினையை நாம் ஏற்றுக் கொள்வதே சரியாகும்.

தமிழ்நாட்டில் நெற்களஞ்சியம் எனக் கருதப்படும் தஞ்சை மாவட்டத்தில் திருக்கடையூர் என்ற சிவத்தலம் உள்ளது. வெகுகாலத்திற்குமுன் அங்கு மிருகண்டு என்ற முனிவர் இருந்தார். அவரது மனைவி மனஸ்வினி. இத் தம்பதிகளுக்கு விவாகமாகிப் பல ஆண்டுகளான போதிலும் ஒரு குழந்தை கூடப் பிறக்கவில்லை. அதனால் மிருகண்டு முனிவர் சிவபெருமானை நோக்கிக் கடுந்தவம் புரிந்தார். சிவபிரானும் அவரது கடுந்தவம் கண்டு அவர் முன் தோன்றி ''பக்தா! உன் தவத்தால் அக மகிழ்ந்தேன். குழந்தை

பாரதீயன்



வேண்டித் தவம் செய்ததால் நூறுவயதுள்ள அறிவற்ற மகன் உனக்கு வேண்டுமா அல்லது பதினாறு வயதுள்ள அறிவாளியான மகன் வேண்டுமா?'' என்று கேட்டார். மிருகண்டுவும் ''அறிவற்ற மகன் எனக்குத் தேவை இல்லை. பதினாறு வயதுள்ள அறிவு மிக்க மைந்தனையே கொடுத்து அருளுங்கள்'' என்று வேண்டினார். சிவபிரானும் அந்த வரத்தைக் கொடுத்து விட்டு மறைந்தார்.

மிருகண்டு தாம் பெற்ற வரத்தைத் தம் மனைவியிடம் கூறவே அவளும் ''நமக்குப் பிறக்கும் குழந்தை பதினாறு வயது வரை தான் இருப்பானா? பிறகு மடிந்து விடுவானா?'' எனக் கண்ணீர் உகுத்தவாறே கேட்டாள். மிருக கண்டுவும் ''முதலில் குழந்தை பிறக்கப் போகிறதே என்று சந்தோஷப்படு. பிறந்த பிறகு அதற்கு அதன் விதிப்படி தான் எல்லாம் நடக்கும். கடவுள் நம்மை க் கைவிட்டு விடமாட்டார்'' என்று தன் மனைவிக்கு ஆறுதல் கூறினார்.

இதற்குச் சில மாதங்களுக்குப் பிறகு மனஸ்வினிதி கருவுற்று, உரிய காலத்தில் ஒரு ஆண் குழந்தையைப் பெற்றாள். மிருகண்டு அக்குழந்தைக்கு மார்க்கண்டே யன் என்ற பெயரை வைத்து வளர்த்து வந்தார். மார்க்கண்டேயனும் மூன்று வயதிலேயே எல்லா சாஸ்திரங்களையும் வேதங்களையும் கற்றுச் சிறந்த அறிவாளி யாகவும் சிவபக்தனாகவும் விளங்கினான்.

ஆண்டுகள் ஒன்றன் பின் ஒன்றாகக் கழிந்து கொண்டிருக்கவே, மிருகண்டு வும் அவரது மனைவியும் தம் மகனின் வாழ்நாள் நாளுக்குநாள் குறைந்து கொண்டே போவது கண்டு தினமும் கண்ணீர் வடிக்கலானார்கள்.

இதைக் கவனித்த மார்க்கண்டேயன் தன் பெற்றோரிடம் ஏன் கவலைப்படு கிறீர்களென்று கேட்க, மிருகண்டுவும் சிவபிரான் அளித்தவரத்தைக் கூறி ''மகனே! உனக்குப் பதினாறு வயது முடிய இன்னும் சில நாட்களே உள்ளன. அதற்குப் பின் நீ இறந்து விடுவாய் நீ இல்லாமல் நாங்கள் எப்படி உயிர் வாழ முடியும்?'' என்று கேட்டார்.

மார்க்கண்டேயனும் ''கவலைப்படா தீர்கள். சிவபிரானின் அருளால் நான் உங்களுக்குக் கிடைத்தேன். அதனால்

அவரது அருளைப் பெற்று மேலும் உயிர் வாழ்வேன். சிவபக்தனான என்னை அவர் கைவிட்டு விடமாட்டார்'' எனக் கூறித் தன் பெற்றோர்களைத் தேற்றினான். அவன் தன் பதினாறாவது வயது முடிவதற்கு ஒரு வாரத்திற்கு முன்பே அவ்வூர் ஆலயத்துள் சென்று சிவலிங்கத்தின் முன் அமர்ந்து சிவனைத் தியானத்தவாறே இருக்கலானான்.

மார்க்கண்டேயனுக்குப் பதினாறு வயது முடிந்ததும் மறுநாள் எமதர்மன் தன் தூதர்களை அனுப்பி மார்க்கண்டேயனின் உயிரைக் கொண்டு வரும்படிக் கட்டளை இட்டான். எமதூதர்களும் அக்கட்டளையை நிறைவேற்ற முயன்றனர். ஆனால் கோவிலுக்குள் சிவலிங்கத்தருகே அமர்ந்திருக்கும் மார்க்கண்டேயனை அவர்களால் அணுக முடியவில்லை. அவனைச் சுற்றி இருந்த ஜோதி அவர்களைத் தகிக்க வைத்து விரட்டியது. எமதூதர்கள் திரும்பிப்போய் எமனிடம் தம்மால் மார்க்கண்டேயனின் உயிரைக் கவர்ந்து கொண்டு வர முடியவில்லை என்று கூறி அதற்கான காரணத்தையும் விளக்கினார்கள்.

அதைக் கேட்ட எமதர்மன் கோபம் கொண்டு ''ஏதோ நெருப்பைக் கண்டா பயந்து வந்துவிட்டீர்கள்? நேற்றோடு அவன் வாழ்க்கை முடிந்து விட்டது. இன்று எப்படியும் அவனது உயிரை எடுத்துக் கொண்டு வந்தே ஆக வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் நான் என் கடமையிலிருந்து தவறியவனாவேன்'' என்று கூறித் திருக்கடையூருக்குச் சென்று சிவன் கோவிலுக்குள் போனான்.



அங்கு சிவலிங்கத்தின் முன் அமர்ந்து மார்க்கண்டேயன் சிவனைத் தியானித்துக் கொண்டிருப்பதைக் கண்டு தன் பாசக் கயிற்றை எடுத்து வீசினான். அது கண்டு மார்க்கண்டேயன் சிவலிங்கத்தைப் பலமாகப் பற்றிக் கொள்ளவே, எமனின் பாசக்கயிறு மார்க்கண்டேயனோடு சிவலிங்கத்தையும் சேர்த்துச் சுற்றிக் கொண்டது. எமன் பாசக் கயிற்றைப் பிடித்து பலமாக இழுக்கவே, சிவலிங்கத்திலிருந்து சிவபிரான் வெளிப்பட்டு எமதர்மனைத் தம்காலால் உதைத்துத்தள்ளினார்.

எமதர்மனும் கீழே விழுந்தவாறே சிவபிரானை வணங்கி ''ஐயனே! நான் என் கடமையைத்தானே செய்தேன்.

அதற்கா எனக்கு இந்த தண்டனை?'' என்று கேட்டான். சிவபிரானும் ''எமதர்மா! இந்த மார்க்கண்டேயன் என் பரமபக்தன். பக்தனைக் காக்க வேண்டியது என் கடமை. இவனுக்கு நான் பதினாறுவயது என வரம் அளித்தது இவன் என்றென்றும் பதினாறு வயதுள்ள இளைஞனாக இருப்பான் என்று தானேயொழிய பதினாறாவது வயதில் இவன் இறந்து விடுவான் என்று கூறவில்லை. நீ தவறாகப் புரிந்து கொண்டு இவனது உயிரைக் கவர்ந்து செல்ல வந்து விட்டாய். சரி, இவனால் உலகிற்குப் பல நன்மைகள் ஏற்படும்'' எனக் கூறி மறைந்தார். எமனும் தன் தவறை உணர்ந்து திரும்பிச் சென்றான். மார்க்கண்டேயனும் அதன் பின் தன் வீட்டிற்குப் போய்த் தன் பெற்றோர்களிடம் கோவிலில் நடந்ததைக் கூறவே அவர்களும் தம்மகனுக்கு மரணமில்லை என அறிந்து மகிழ்ந்தனர். மார்க்கண்டேயனும் முனிவர் என்ற பெயர் பெற்று உலகம் உய்யப் பல நற்செயல்கள் புரிந்து மக்களுக்கு நல் வழிகாட்டினார்''.

சோமநாதர் இக்கதையைச் சொல்லி முடித்ததும் சேகர் ''கதை நன்றாகவே இருக்கிறது. ஆனால் சில நம்பமுடியாத நிகழ்ச்சிகள் உள்ளன. ஒருவேளை இக் கதையைச் சொல்லிக் கொண்டு வந்தவர்கள் மிகைப்படுத்திக் கூறிவிட்டார்களோ''? என்று கேட்டான், சோமநாதரும்'' இருக்கலாம். ஆனால் இம் மாதிரிக் கதைகளிலிருந்து நாம் பல நற்போதனைகளைப் பெறுகிறோம். கடவுளை நம்பினோர் கைவிடப்படார் என்று தெரிந்து கொள்கிறோம். கடமையை ஒருவன் செய்யும்போது அதனால்விளையும் பலன் என்ன என்று கவலைப்படாமல் அதைச் செய்து முடிக்க வேண்டும். மார்க்கண்டேயனின் பக்தியும், எமதர்மனின் செயலும் இவற்றை நமக்கு உணர்த்துகின்றன. இந்த நற்போதனைகளை நாம் மனதில் கொள்வோம்'' என்றார்.

சேகரும் சியாமளாவும் ''ஆமாம் தாத்தா. நீங்கள் சொல்வது தான் சரி. நாமும் இம்மாதிரிக் கதைகள் பற்றி சிந்தித்து படிப்பினைகளை ஏற்போம்'' என்றனர்.





# எதற்குப் போட்டி?

மீனா துடுக்கானவள் என்று அந்த ஊரில் பெயர்பெற்று விட்டாள். யாராவது எதாவது கேட்டால் தூக்கி எறிந்து பேசி முகத்தில் அறைவது போல பதிலைக்கூறி வந்ததால் அவள் அப்படி ஒரு பெயர் பெற்று விட்டாள். அவள் கல்யாணமாகி கணவன் வீட்டிற்குச் சென்றால் அங்கு எப்படி இருப்பாளோ என்று அவளது பெற்றோர்பயப்படலானார்கள்.

ஒரு நாள் அவளைப் பெண் பார்க்க ஆறுமுகம் என்பவன் தன் தாய் சிவகாமியுடனும் தந்தை அண்ணாமலையுடனும் வந்தான். சிவகாமியோ வாயாடி. சண்டைக்காரி. இதை மீனாவும் அவளது பெற்றோரும் அறிந்திருந்தனர். ஆறுமுகம் நல்லவன். பள்ளி ஆசிரியராகத் தன் ஊரில் வேலை பார்த்து வந்தான். பெற்றோருக்கு ஒரே மகன். அக்கா தங்கை என்று யாருமில்லை. அண்ணாமலைக்கு ஊரில் சொந்த வீடும் கொஞ்சம் நல்ல விளைச்சல் நிலமும் இருந்தது.

மீனாவுக்கும் ஆறுமுகத்தைப் பிடித்துப் போயிற்று. அவர்களது பெற்றோர்களும் சம்மதித்தனர். சிவகாமியும் மீனாவைத் தன் மருமகளாக ஏற்பதாகக் கூறவே மீனாவுக்கும் ஆறுமுகத்திற்கும் கல்யாணம் நடந்து விட்டது. ஊரார் துடுக்கு மீனாவும், சண்டைக்காரி சிவகாமியும் எப்படி சேர்ந்து இருக்கப் போகிறார்களோ என்று கவலைப் படலானார்கள்.

மீனா தன் கணவன் வீட்டிற்குச் சென்றாள். அவளது பெற்றோர்களோ அவள் எந்த நிமிடம் தன் துடுக்குப் பேச்சால் மாமியார் வீட்டில் சண்டை போட்டு விட்டு வரப் போகிறாளோ என்று பயந்து கொண்டிருந்தார்கள். அங்கு அண்ணாமலையோ தன் மனைவி சிவகாமி மருமகள் மீனாவுடன்

- எஸ்.சுதா -

சண்டை போட மீனா கோபித்துக் கொண்டு எப்போது தன் பிறந்த வீட்டிற்குப் போய் விடுவாளோ என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்தான்.

ஆனால் அவர்கள் எதிர்பார்த்தபடி எல்லாம் எதுவும் நடக்கவில்லை. எனெனில் சிவகாமி தன் மருமகளைப் போல நல்லவள் எங்கும் இல்லை என்று ஊராரிடம் எப்போதும் கூறி வந்தாள். இது போலவே மீனாவும் தன் மாமியாரைப் போல நல்லவளை எங்குமே பார்க்க முடியாது என்று தான் பார்த்தவர்களிடம் எல்லாம் சொல்லிக் கொண்டே இருந்தாள். இப்படியே சில மாதங்கள் கழிந்தன.



ஒருநாள் மீனா தன் ஊருக்கு வந்தாள். அங்கு எல்லோரும் அவளிடம் அவள் மாமியாரைப் பற்றி விசாரித்தார்கள். அவளும் எல்லோரிடமும் தன் மாமியார் மிகவும் நல்லவள் என்று கூறினாள். அன்றிரவு அவளது தாயார் மீனாவிடம் ''ஆகா! உனக்கு நல்ல இடமாக அமைந்து விட்டது. உன் மாமியாரும் மிகவும் நல்லவள் என்று எல்லோரிடமும் சொல்கிறாய். உன் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம்'' என்றாள்.

மீனாவோ ''நீதான் என் அதிர்ஷ்டத்தை மெச்சிக் கொள்ள வேண்டும்'' எனவே மீனாவின் தாயாரும் ''ஏன்! ஒரு மாமியார் மருமகளைக் கொடுமைப் படுத்தாமல் இருப்பது மருமகளின் அதிர்ஷ்டம்தானே'' என்று கேட்டாள். மீனாவும் ''என் மாமியார் கொடுமைப் படுத்த மாட்டாள் என்று ஏன் நினைக்கிறாய்?'' என்று கேட்டாள். மீனாவின் தாயாரும் ''ஆமாம்! மறந்தே விட்டேன். உன் மாமியார் வாயாடி என்றும் சண்டைக்காரி என்றும் பெயர் பெற்றவளாயிற்றே'' என்றாள்.

மீனாவும் ''இது தெரியுமல்லவா உனக்கு? இப்படிப்பட்டவளிடம் சுமுகமாக வாழும் என்னை ஏன் பாராட்டாமல் இருக்கிறாய்?'' என்று கேட்டாள். மீனாவின் தாயாரும் ''அவளைச் சரி செய்து கொண்டு போவது மிகவும் சிரமமே என்று எல்லோருக்கும் தெரியும். அதனால் தான் உனக்கு அதிர்ஷ்டம் என்றேன்'' எனக்கூறினாள்.

மீனாவும் ''அப்படியானால் கேட்டுக் கொள். என் மாமியார் என்னைக் கொடுமைப் படுத்தியே வருகிறாள். நான்

மிகவும் நல்லவளாக இருப்பதால் தான் அவளைப் புகழ்ந்து கொண்டிருக்கிறேன். பெற்ற தாயான நீயே என் நற்குணத்தைப் புகழாவிட்டால் இது வரை நான் சிரமப் பட்டது எல்லாம் வீணே'' என்றாள்.

மீனாவின் தாயும் ''இதுவா விஷயம்! இது எனக்குத் தோன்றவில்லையே. நான் வந்து உன் மாமியாரிடம் நாக்கை பிடுங்கிக் கொள்ளும்படி நான்கு கேள்வி களைக் கேட்கிறேன் பார்'' என்று ஆத்திரப்பட்டுக் கூறினாள். அது கேட்டு மீனா '' வேண்டாம் அம்மா! நான் நல்லவள் என்பதையும் என் மாமியார் நல்லவளல்ல என்பதையும் நீ தெரிந்து கொண்டால் அது போதும்'' என்றாள்.

ஆனால் மனது கேளாமல் மீனாவின் தாயார் தன் ஊரிலேயே உள்ள சிவகாமி யின் உறவினளான பத்மாவின் வீட்டிற் குப் போய் சிவகாமியைப் பற்றி குறை கூறினாள். பத்மா 'களுக்'கென்று சிரிக்க வே மீனாவின் தாயார் ஏன் சிரிக்கிறாய் என்று கேட்டாள். பத்மாவும் ''உன் பெண் மீனாவும் அவள் மாமியார் சிவகாமியும் குள்ள நரிகள். சரியாக வேஷம் போடுகிறார்கள். போனவாரம் அவளது ஊருக்குப் போயிருந்தேன். அப்போது தான் குட்டு வெளிப்பட்டது. சிவகாமி தான் நல்லவளெனப் பெயர் பெறத் தன் மருமகளைப் புகழ்கிறாள். மீனாவோ தான் நல்லவளெனப் பெயர் பெற வேண்டும் என்பதற்காகத் தன் மாமியாரை ஒரேயடியாகப் புகழ்கிறாள். இரண்டு பேர்களிடையேயும் இதற்குத் தான் போட்டி, இருவரின் இயல்புகள் சற்றும் மாறவில்லை. இருவரின் நோக் கமும் கெட்டதே. இதனால் ஊராருக்கு ஒரு நன்மை. அது என்னவென்றால் இரண்டு பேரும் இப்படி ஒருவரை யொருவர் புகழ்ந்து கொண்டே இருப்ப தால் அவர்களுக்குச் சண்டை போட நேரம் இருப்பதில்லை. அதனால் அந்த ஊரார் நிம்மதியாக இருக்கிறார்கள்'' என்றாள்.

அதைக் கேட்டு மீனாவின் தாயாரும் 'களுக்'கென்று சிரித்துவிட்டாள்!



கதையின் முடிவை எழுதுங்கள்! கவர்ச்சிகரமான பரிசைப் பெறுங்கள்

# ஆக்க பூர்வமான போட்டி

ஒரு கதையின் முன்பகுதி கீழே கொடுக்கப்பட்டுள்ளது. அதைப்படித்து விட்டு அதன் சரியான முடிவை 200 சொற்களில் எழுதி அனுப்பவேண்டியதே உங்கள்வேலை. இப்போட்டி இளைஞர் களுக்கு மட்டுமே அதனால் அனுப்பப்படும். கதையின் பகுதியுடன் உங்கள் பெயர், வயது படிக்கும் வகுப்பு, பள்ளி, ஊர், அதன் பின் கோடு ஆகிய விவரங்களை தெளிவாக எழுதி அனுப்பவும். பெரிய வர்களின் உதவி இல்லாமல் நீங்களே முயன்று இந்த அரியவாய்ப்பால் பயனடையுங்கள்.

மலயபுர மன்னன் மார்த்தாண்டவர்மன் முதுமை அடைந்து விட்டதால் தன்மகன் பிரதாபனுக்குவிரைவில்பட்டம்கட்டி நாட்டின் மன்னனாக்க நினைத்தான். அதற்குமுன் நாட்டைச் சுற்றிப்பார்த்து வரும்படித் தன் மகனிடம் அவன் கூறவே பிரதாபனும் தன் குதிரைமீதமர்ந்து கிளம்பினான்.

கொஞ்சதூரம் போனதும் குதிரையிலிருந்து இறங்கி அதனை ஓரிடத்தில் விட்டு பிரதாபன் நடந்தே சென்றான். கொஞ்சதூரம் போனதும் அவனது ஒரு கால் செருப்பு அறுந்து விடவே அவன் இரண்டு செருப்புகளையும்தூக்கிஎறிந்து விட்டு செருப்பு இல்லாமலே வெறும்காலுடன் நடந்து சென்றான். கொஞ்சதூரம் போனதும் அவனது வலது காலில் ஒரு முள்தைத்தது. வலிபொறுக்க முடியாமல் அவன் அங்கிருந்த ஒரு பாறைமீது உட்கார்ந்துகொண்டு யாராவது உதவிபுரிய வருவார்களா என்று எதிர் பார்க்கலானான்.

சற்று நேரம் கழிந்ததும் ஒரு இளம் பெண் வயலில் வேலை செய்யும் தன் தந்தைக்கு மதிய உணவு எடுத்துக்கொண்டு அவ்வழியே வந்தாள்.

பாறைமீது உட்கார்ந்து காலைப்பிடித்துக் கொண்டிருந்த பிரதாபனைப் பார்த்து ''என்னய்யா? முள்குத்திவிட்டதா?'' என்று கேட்கவே அவன் ஆமெனத்தலையை அசைத்தான் அவள் உடனே உணவு மூட்டையைக் கீழேவைத்து விட்டு ஒரு பெரிய முள்ளை எடுத்து வந்து அதனால் பிரதாபன் காலில் குத்திய முள்ளை எடுத்தாள். அப்போது அவனது காலிலிருந்து ரத்தம் வரவேஅவள் சுற்றிலும் பார்த்து ஒரு செடியிலிருந்து சில இலைகளைப் பறித்து வந்து அவற்றைக் கசக்கி சாறு எடுத்து காலில் ரத்தம் கசிந்த இடத்தில் தடவினாள். பிறகு தன் புடவைத் தலைப்பைக் கிழித்து அவனது காலில் கட்டுப்போட்டாள்.

அப்போது பிரதாபன் ''அப்பாடா வலிபோயிற்று'' என்று கூறி ''பெண்ணே! நீ செய்த இந்த உதவிக்கு என்ன கேட்டாலும் கொடுக்கிறேன்'' என்றான். அவளும் சிரித்த வாறே ''பேஷ் பேச்சென்னவோ பெரிய மகாராஜா பேசுவதுபோல இருக்கிறதே. நீஎன்னை மணந்து கொண்டு உன் பட்டத்து ராணியாக ஆக்கிகொள்ள முடியுமா''? என்று கேலிசெய்வதுபோலக்கேட்டாள்.

இக்கதையின் பின்பகுதியை எழுதிதக்கதலைப்பையும் கொடுத்து ஆக்கபூர்வமானபோட்டி கதை என எழுதி அக்டோபர் 31க்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள்.

## செப்டம்பர் 2000 பாரததரிசனப்புதிர் விடைகள்

1. ஆ) ஆரியபட்டர்

ஆ) காஷ்மீரிலுள்ள அமர்நாத்தில்

இ நசிகேதன்

ஈ) சார்வாகர், ஜாபாலி(சத்தியகாம ஜாபலி அல்ல) கோசாலர்

உ) அக்பர் (தீன்.எ.இலாஹீ).

ஊ) ருருவர் பிரமத்துவர்



# மணமகள் தேர்வு!

கோவிலூர் கோவிந்தராஜன் பெரும் பணக்காரர். அவர்தம் மகன் சுந்தர ராஜனுக்கு ஏற்ற பெண்ணாகப் பார்த்து அவனுக்கு மணமுடித்து வைக்க நினைத்தார். அவன் அவரது ஒரே மகன். இளைஞன், அழகானவன், நன்கு படித்தவன். எனவே அழகாகவும், அறிவுள்ளளவளாகவும் உள்ள பெண்ணை தேர்ந்தெடுக்க அவர் நிச்சயித்தார். ஆனால் பல பெண்களைப் பார்த்தும் அவர் எதிர்பார்த்தபடி ஒருத்திகூடக் கிடைக்கவில்லை. அழகிருந்தால் அறிவு இல்லை, அறிவு இருந்தால் அழகில்லை. இப்படிப்பட்டவர்களே அவர் பார்த்த பெண்கள்.

அவர் அன்றும் எங்கே போய் பார்க்கலாம் என்று யோசித்துக் கொண்டிருந்தபோது அவரது வெளியூர் நண்பர் ரங்கராஜன் வந்தார். அவரிடம் பேச்சுவாக்கில் கோவிந்தராஜன் தன் மகனின் திருமணம் பற்றித்தாம் நினைத்திருப்பதைக் கூறினார். ரங்கராஜனும் ''கல்யாண விஷயத்தில் ஆணாலும் சரி, பெண்ணானாலும் சரி, எப்படிச் செயல்படுகிறார்கள் என்பதைத்தான் முதலில் கவனிக்க வேண்டும். அழகு, அந்தஸ்து, படிப்பு என்பதெல்லாம் பிறகுதான். நீங்கள் நான் கூறியபடி பெண்ணைத் தேர்ந்தெடுப்பதானால் திருச்சிக்குப் பக்கத்திலுள்ள மருதூர் என்ற ஊருக்குப் போங்கள். அங்கே சிவராஜன் என்பவருக்கு அழகானவளும், அறிவுள்ளதுமான பெண் ஹேமா என்பவள் இருப்பதாகக் கேள்விப்பட்டேன். நீங்கள் ஒரு முறை அங்கு போய் அந்தப் பெண்ணைப் பாருங்கள்.

பாபநாசம் சாமா

நீங்கள் விரும்புகிற விதமாய் அவள் இருப்பாள் என்றே நினைக்கிறேன்'' என்றார்.

கோவிந்தராஜனும் ''சரி, அவரது வீட்டு முகவரியை முழுவதுமாகக் கொடுங்கள்'' எனவே, ரங்ராஜனும் ஒரு துண்டுக் காகிதத்தில் எழுதிக் கொடுத்தார். அதை வாங்கிக்கொண்ட கோவிந்தராஜன் நாலைந்து நாட்களுக்குப் பின் மருதூருக்குச் சென்றார். அங்குள்ள வீடுகளில் எது சிவராஜனின் வீடுஎனத் தேடியவாறே அவர் ஒரு வீட்டு வாசலில் நின்றார். அங்கு சேறும் சகதியுமாக இருந்ததால் அவரது காலில் சேறு அப்பிக் கொண்டது. அதற்கு முந்தையதினம் மழை பெய்ததால் தான் தண்ணீர் தேங்கி அப்படி ஆகி விட்டதென்று அவர் புரிந்து கொண்டார்.

அவர் மெதுவாக இரண்டடி எடுத்துவைத்து அந்த வீட்டு வாசல் கதவருகே சென்றார். அப்போது அவ்வீட்டினுள்ளிருந்து இளம் பெண்ஒருத்தி ஓடி வந்து அவரைப் பார்த்தாள். அவரும் ''பெண்ணே! காலில் சேறு அப்பிக் கொண்டு விட்டது. கொஞ்சம்தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தால் காலை அலம்பிக்கொள்வேன்'' என்றார்.

அந்தப் பெண்ணும் ''அது சரி, முதலில் நீங்கள் எங்கள் வீட்டைத் தேடித்தான் வந்தீர்களா என்பதைச் சொல்லுங்கள்'' என்று கேட்டாள். அவரும் ''நான்சிவராஜன் என்பவரின் வீட்டிற்குப் போகவேண்டும். ஒருவேளை இதுதான் அவர் வீடோ?'' என்று கேட்டார். அவளும் ''ஆமாம் நீங்கள் தேடிவந்த வீடு இதுதான்.



இருங்கள். தண்ணீர் கொண்டு வருகிறேன். கால் அலம்பிக்கொண்டு உள்ளே வாருங்கள். என் தந்தை உள்ளே இருக்கிறார்''. என்று சொல்லிக் கால் அலம்பிக் கொள்ளத் தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தாள்.

கோவிந்தராஜனும் கால்களை நன்கு அலம்பிக் கொண்டு அந்தப் பெண் கொடுத்த துண்டால் கை கால்களைத்துடைத்துக் கொண்டுவிட்டு அவளிடம் ''ஆமாம், கால் அலம்பிக் கொள்ள நான் தண்ணீர் கேட்டபோது நீ உடனே கொண்டுவந்து கொடுக்காமல் நான் யார் வீட்டிற்கு வந்தவன் என்று கேட்டு அதைத் தெரிந்து கொண்டபிறகுதானே தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தாய். இது கொஞ்சம் விசித்திரமாக இருக்கிறதே'' என்றார்.

அதற்கு அவளும் ''இதில் விசித்திரமாக எதுவும் இல்லையே. நான் உங்களை இதற்கு முன் பார்த்ததே இல்லை. அதாவது நீங்கள் இந்த வீட்டிற்கு முற்றிலும் புதியவர். நீங்கள் தேடிவந்த வீடுஇது இல்லை என்றால் நீங்கள் திரும்பித்தான் போவீர்கள். அப்போதும் நீங்கள் சேற்றை மிதித்துக் கொண்டுதான் போயாக வேண்டும். அப்போது நீங்கள் கால் அலம்பிக் கொள்வது வீண்தானே. அதனால் நீங்கள் பார்க்க வந்தது என் தகப்பனார்தான் என்பதை உறுதி செய்து கொண்டேன். அதன் பிறகே நீங்கள் கால் அலம்பிக்கொள்ளத் தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தேன்'' என்றாள்.

இந்த பதிலைக் கேட்டு கோவிந்தராஜன் ஆச்சரியமும் மகிழ்ச்சியும் அடைந்தார். இப்படி முன்கூட்டியே எதையும் யோசித்துச் செயல்படும் இந்தப் பெண்தான் தன் மகனுக்கு மனைவியாகவேண்டும் என்று அவர் தீர்மானித்துக் கொண்டார். அதனால் சிவராஜனிடம் தன் மகன் சுந்தரராஜனுக்கு ஹேமாவைப் 'பெண் கேட்க' அந்த வீட்டிற்குள் சென்றார்.





# போதும் உன் கதை!

கிட்டுவை யார் கண்டாலும் உடனே ஓடி ஒளிந்து கொள்வார்கள். காரணம் அவன் அவர்களது கையைப் பிடித்து உட்கார வைத்துத் தான் சொல்லும் கதையை அவர்கள் கேட்க வேண்டும் என்று கட்டாயப்படுத்துவான். அப்படியாவது அவன் சொல்லும் கதை சுவாரசியமாக இருக்குமா என்றால் அது தான் இல்லை. வழ வழ கொழ கொழவென்று விளக்கெண்ணெய் போல இருக்கும்.

ஒரு நாள் அவன் கூறும் கதை யைக் கேட்க யாரும் கிடைக்காமல் போகவே, அவன் தன் தாயாரிடம் கதை சொல்லப் போகவே, அவள் தனக்கு வீட்டு வேலை நிறைய இருப்பதாகக் கூறிப் போய் விட்டாள். பாட்டியோ, வீட்டில் யாருமே சரியாக வேலை செய்யாததால் தான் கண்காணிப்பதால் தனக்கு நேரமில்லை என்று கூறி விட்டாள். தன் அத்தை மகளிடம் அவன் கதை சொல்ல முயலவே, அவள் ''போ போ இவ்வார இதழில் வெளிவந்துள்ள தொடர்கதையை சுவாரசியமாகப் படித்துக் கொண்டிருக்கிறேன்'' என்று கூறி விரட்டி விட்டாள்.

கடைசியில் அவனது நண்பன் ஒருவன் அவனுக்குக் கிடைக்கவே, கிட்டு அவனுக்குக் கதை சொல்லலானான். ஒரு மணி நேரம் கழிந்தது. அப்போது அவனது நண்பன் ''என்ன கிட்டு! கதை முடிந்து விட்டதா?'' என்று கேட்கவே கிட்டுவும் ''இல்லையே. இன்னமும் ஆரம்பப் பகுதியில் தான் இருக்கிறோம்'' என்றான். அப்போது அந்த நண்பன் 'இரு! தண்ணீர் குடித்து விட்டு வந்து மீதக்கதையைக் கேட்கிறேன்'' என்று கூறி நழுவி விட்டான்.

கிட்டு யாரையாவது சந்தித்து விட்டால் அவர் சொல்லும் முதல்

– சிவனார் செல்வன்



வார்த்தை ''அப்பனே! நீ கதை மட்டும் சொல்லாதே. வேறு ஏதாவது தகவல் இருந்தால் சொல்'' என்பது தான். இதனால் தான் சொல்லும் கதையைக் கேட்க யாரும் இல்லையே என்று வருத்தப்படலானான். அவனுக்கு ஒரு யோசனை தோன்றியது. பேய், பிசாசுகளுக்குக் கதை கேட்பதென்றால் மிகவும் பிடிக்கும் என்று அவன் கேள்விப்பட்டிருந் தான். அதனால் ஒரு நாளிரவு அவ்வூர் மயானத்திற்குச் சென்றான்.

கதை சொல்ல யாரோ வந்திருக் கிறான் என்று கேள்விப்பட்டதும் அந்த மயானத்துப் பிசாசுகளெல் லாம் வந்து கிட்டுவைச் சூழ்ந்து உட்கார்ந்து கொண்டன. தன் கதை யைக் கேட்க அவை ஆவலாக இருப் பது கண்டுகிட்டு மகிழ்ந்து போய் சற்றும் பயப்படாமல் கதை சொல் லலானான். கதையைச் சொல்லி பத்து நிமிடங்களுக்குப் பிறகு அவன் சுற்றிலும் பார்க்கவே, அங்கே ஒரு பிசாசு கூட இருக்கவில்லை. மறு நாள் முதல் அந்த மயானத்திற்கு ஒரு பிசாசு கூட வரவில்லை. காரணம் கிட்டு எங்கே தம்மை பிடித்து உட்கார வைத்துக் கதை சொல்ல ஆரம்பித்து விடுவானோ என்ற பயம் தான்.

இச்சமயத்தில் ராஜத்துரோகி ஒரு வன் பிடிபட்டான். அவனைச் சித்தி ரவதை செய்தும்கூட அவனிடமி ருந்து எதையும் தெரிந்து கொள்ள முடியவில்லை. அப்போது யாரோ மன்னனிடம் கதை சொல்லும் கிட்டுவைப் பற்றிக் கூறவே மன்ன னும் அவனை அழைத்து வந்து முயற்சி செய்து பார்க்குமாறு கூறி னான். அரசாங்க வீரர்களும் கிட்டு வை அழைத்து வந்து ராஜத்துரோகி யின் முன் நிறுத்தினார்கள், கிட்டுவும் அவனுக்குக் கதை சொல்ல ஆரம் பித்தான்.

ராஜத்துரோகியால் அதைக் கேட் டுக் கொண்டிருக்க முடியவில்லை. தலைவலிக்கலாயிற்று. கிட்டுவா விடுவான்? கதையைச் சொல்லிக் கொண்டே இருந்தான். இதனால் வெறுப்படைந்து அவன் தான் யாருடைய கையாள் என்பதையும் தங்கள் சதித்திட்டத்தையும் கூறி விட்டான். இதனால் மகிழ்ந்து

மன்னன் கிட்டுவுக்கு ஏராளமாகப் பரிசுகளை அளித்தான். அதனால் திருப்தி அடைந்து விடாமல் அவன் மன்னனிடம் தான் கூறும் கதை யைக் கேட்டுக் கொண்டே இருக்க ஒருவனைக் கொடுக்குமாறு வேண்டினான்.

மன்னன் அவனது வேண்டு கோளைத் தன் அமைச்சர்களிடம் கூறினான். அவர்கள் யோசனை செய்து தம்மால் முடியாதென அறிந்து அரசாங்கப் புரோகிதரின் உதவியை நாடினார்கள். அவரும் மன்னனிடம் 'அரசே! கிட்டு அபூர்வ சக்தி படைத்தவன். அவன் சொல்லும் கதையைக் கேட்க ஒரு மனிதனைக் கொடுப்பது என்பது நம் போன்ற மனிதர்களால் முடியாது. இது தெய்வத்தால் தான் முடியும். எனவே கிட்டு தன் கதையைப் பனை ஓலையில் எழுத்தாணி கொண்டு எழுதிய வாறே கடவுளைப் பூஜித்தால் அவர் அவன் முன் தோன்றி அவனது கோரிக்கையை நிறைவேற்றுவார். எனவே இவனுக்கு பூஜையறை என ஒன்றை ஏற்பாடு செய்து கொடுங்கள்'' எனறார்.

மன்னனும் அவனுக்கு ஒரு பூஜை அறையைக் கொடுத்து அதில் ஏராளமான பனை ஓலைகளையும் ஒரு எழுத்தாணியையும் வைக்கச் செய்தான். கிட்டுவும் தெய்வ விக்கிர கத்தின் முன் அமர்ந்து தனக்குத் தோன்றிய கதையை ஓலைகளில் எழுதி அதை மந்திரம் போலப் படித்து கடவுளை வழிபடலானான். சற்று நேரம் கழிந்ததுமே கடவுள்





குளத்திலுள்ள நீரின் ஆழத்தைப் பொறுத்துத் தாமரைத் தண்டின் நீளம் இருக்கும். அது போல, மனிதனின் மனதிற்கேற்ப அவனது உயர்வு மதிப்பிடப்படும்.

அவன் முன் தோன்றி ''உன் இந்த மந்திரத்தை நிறுத்து'' என்றார்.

கிட்டுவும் ''ஆகா! என் பாக்கியமே பாக்கியம். உங்கள் தரிசனம் கிடைத்ததே. நான் சொல்லும் கதையைக் கேட்டுக் கொண்டிருக்க ஒரு மனிதனைக் கொடுத்து அருளுங்கள்'' என வேண்டினான். கடவுளும் புன்னகை புரிந்தவாறே ''மகனே! ராமாயணம், மகாபாரதம் ஆகியவை நாளாவட்டத்தில் புகழ் பெற்றது போல உன் படைப்பும் புகழ் பெறும். அதற்கு என்று ஒரு வேளை வரும். அது வரை நீ எழுதியதை மட்டும் என் முன் உரக்கப் படிக்கக் கூடாது'' என்றார்.

''அப்படியானால் என் கதையை கேட்க ஒருவன் எப்போது வருவான்?'' என்று கிட்டு கேட்கவே கடவுளும் ''நீ எழுதி வைக்கும் கதைகள் எப்படியாவது வானொலி நிலையங்களுக்கும் தொலைக்காட்சி நிலையங்களுக்கும் கிடைத்து விடும். அப்போது அது விஞ்ஞான யுகம். உன் கதைகளை அவை தொடர் கதையாக ஒளி, ஒலி பரப்பும். அப்போது உன் கதையை ஒருவன் மட்டுமல்ல, லட்சக்கணக்கான மக்கள் கேட்பார்கள். ஆனால், ஒன்று மட்டும் நினைவில் வைத்துக் கொள். நீ எழுதும் தொடர்கதையை என் முன் உட்கார்ந்து மெதுவாகவோ உரக்கவோ படிக்க மட்டும் கூடாது'' எனக் கூறி விட்டு மறைந்தார்.

கிட்டு இருந்த யுகம் துவாபரயுகம். கலியுகம் வந்ததும் யாரும் கேட்க பயந்த கிட்டுவின் கதைகள் விஞ்ஞான சாதனங்கள் வாயிலாக ஒலிக்கலாயின.





# வாக்கு தவறவில்லை!

ஜமீன்தாரர் ஜகதலப்பிரதாபர் நற்பணிகளுக்கு பெயர் பெற்றவர். மக்கள் அவரைப்புகழ்ந்தாலும் ஒரு சிலருக்கு அவர் மீது பொறாமை இருக்கத்தான் இருந்தது. ஒரு நாள் ஜமீன்தார் தம் மாளிகை முன் ஊர்ப் பிரமுகர்களுடன் நாட்டு வளப்பம் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார். அப்போது ஒரு செப்பிடுவித்தைக் காரன் அங்கு வந்து ''ஏஜமானரே! நான் என் வித்தைகளைச் செய்து காட்ட அனுமதி கோருகிறேன்'' என்றான்.

ஜமீன்தாரரும் 'ஆகா! செய்து காட்டு. நாங்களும் சந்தோஷப்படு வோம். நீ கேட்பதை நான் உனக்குக் கொடுக்கிறேன்'' என்றார். வித்தைக் காரனும் ''என் கோரிக்கையை நிறை வேற்றுவீர்களல்லவா? வாக்குத் தவற மாட்டீர்களே'' என்றான். ஜமீன் தாரும் ''நான் என்றுமே வாக்கு தவறியது இல்லை. எனவே என்ன விரும்பினாலும் அதைக் கொடுக் கிறேன் வித்தைகளைச் செய்து காட்டு'' என்றார்.

செப்பிடு வித்தைக்காரனும் சில வித்தைகளைச் செய்து காட்டி ஜமீன் தாரையும் அங்கிருந்த பிரமுகர்க ளையும் மகிழ்வித்தான். அப்போது ஜமீன்தார் ''பேஷ், பேஷ்!! உன் கோரிக்கை என்ன? சொல். நீ கேட்ப தைக் கொடுக்கிறேன்'' என்றார். வித்தைக்காரனும் ''நான் தங்களை மொட்டைத்தலையுடனும் மீசை இல்லாமலும் காண விரும்பு கிறேன்'' என்றான். அது கேட்டு

- பாலாஜி கிருஷ்ணன் -

ஜமீன்தாரரும் அங்கிருந்தவர்களும் திகைத்துப் போனார்கள். ஜமீன் தாரரின் மீசை தான் அவருக்கு கம்பீர மான தோற்றத்தை அளிப்பது. அதை எடுத்து விட்டால் எவ்வளவு அவமானம்!

ஜமீன்தார் என்ன செய்வது என்று யோசிக்கலானார். அவரது திவான் சோமசர்மாவிற்கு செப்பிடு வித்தைக் காரன் ஜமீன்தாரின் எதிரிகளின் கையாள் என்றும் அவர்கள் ஜமீன் தாரை அவமானப்படுத்தத் தீட்டிய திட்டம் அது என்றும் தெரிந்து விட்டது. ஜமீன்தாரரிடம் அவர் ''நீங்கள் கவலைப்படாதீர்கள். நான் இவனது விருப்பத்தை நிறைவேற்று கிறேன்'' என்று கூறி செப்பிடுவித் தைக் காரனிடம் ''நீ என்னோடு வா'' என்று கூறி அவனை அழைத்துக் கொண்டு போனார்.

''இந்த திவான் என்ன செய்யப் போகிறார்? வித்தைக்காரனுடன் நாவிதனை அழைத்துக் கொண்டு வந்து ஜமீன்தாரரின் தலையை மொட்டை அடித்து மீசையை எடுத்து விடச் செய்யப் போகிறாரா? ''என்று எண்ணி எல்லோரும் கலங்கினார்கள்.

சோமசர்மா வித்தைக்காரனுடன் திரும்பி வந்தார். அவனது தலை மொட்டை அடிக்கப்பட்டிருந்தது. அவனது முகத்து மீசை மழுங்கச் சிரைக்கப்பட்டிருந்தது. சர்மா அவனை ஜமீன்தார் முன் நிறுத்தி அவனிடம் ''நீ கேட்டது என்ன? ஜமீன்தாரை மொட்டைத்தலையுட னும் மீசை இல்லாமலும் பார்க்க வேண்டும் என்பது தானே! இதோ ஜமீன்தார் இருக்கிறார்! நீ மொட் டைத் தலையுடனும் மீசை இல்லா மலும் தானே இருந்து அவரைப் பார்க்கிறாய். உன் விருப்பம் நிறை வேறி விட்டது'' என்றார். எல்லோ ரும் சந்தோஷத்தில் கை தட்டி பல மாகச் சிரித்தார்கள். செப்பிடு வித்தைக்காரன் அவமானம் தாங்கா மல் ஓடியே போய் விட்டான்.



56 பீமனின் பராக்கிரமம்

# மகாபாரதம்

பாண்டவர்களைப்பற்றி திருதாஷ்டிரன் கூறியதைக் கேட்ட சஞ்சயன் "மன்னனே! பாண்டவர்களிடம் எவ்விதமந்திர சக்தியோ அல்லது மாய சக்தியோ இல்லை. போரில் அவர்கள் தமக்குள்ள பலத்தைக் காட்டிக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் கடைப்பிடிக்கும் தர்மநெறியே அவர்களுக்கு வெற்றியை அளித்துக் கொண்டிருக்கிறது. உம் புதல்வர்கள் புரிந்த கெட்ட செயல்களே அவர்களை அழித்துக் கொண்டிருக்கிறது. உமக்கு எவ்வளவோ பேர்கள் அறிவுரைகளைக் கூறினார்கள். நீர் அவற்றில் ஒன்றையாவது ஏற்று நடந்தீரா? விதுரர், பீஷ்மர், துரோணர், நான் என்று எல்லோரும் எவ்வளவு எடுத்துக்கூறினோம்? நீர் கேட்டீரா? நீர் கேட்டது போல துரியோதனன் இப்போது பீஷ்மரிடம் கேட்டுக் கொண்டிருக்கிறான். அதைக் கேளும்" என்றான்.

துரியோதனன் பீஷ்மரிடம் "பிதாமகரே! தாங்களும் துரோணரும் கிருபரும் மற்றும் பல மகாரதர்களும் எனக்காக கடுமையாகப் போர் புரிந்தும் பாண்டவர்களைத் தோற்கடிக்க முடியவில்லையே. இதற்குக் காரணம் என்ன?" என்று கேட்டான். பீஷ்மரும் "நான் பல முறை கூறிவிட்டேன். இப்போதும் கூறுகிறேன்.





ஸ்ரீகிருஷ்ணன் பாண்டவர்களின் பக்கம் இருக்கும்வரை அவர்களை யாராலும் வெல்ல முடியாது'' என்றார். மேலும், விஸ்வோபாக்கியானத்தை அவர் துரியோதனனுக்கு விளக்கலானார்.

ஒருதடவை பிரம்மா, கந்தமாதனபர்வ தத்தில் இருந்தபோது தேவர்களும், முனிவர்களும் அவரைக்காணவந்தார்கள். அப்போது ஆகாயத்தில் ஒளி வீசிக் கொண்டு ஒரு விமானம் பறந்தது. பிரம்மா அதைக் கண்டு கைகூப்பி வணங்கி தியானத்தில் அமர்ந்தார். அதைக் கண்டு தேவர்களும் முனிவர்களும் அதை வணங்கினார்கள். பிரம்மா அதனைப் பார்த்து ''தேவதேவா! உன் அம்சத்தை யதுவம்சத்தில் பிறக்கச் செய்'' என்று வேண்டினார்.

அப்போது ''உன் கோரிக்கைப்படி நடக்கும்'' என்ற குரல் உயரத்திலிருந்து ஒலித்தது. தேவர்களும் முனிவர்களும் அந்த விமானத்தை பார்த்துக் கொண்டி ருக்கும் போதே அது மறைந்து விட்டது. அப்போது அவர்கள் பிரம்மாவிடம் ''நீங்கள் யாரிடம் வேண்டிக் கொண்டீர் கள்'' என்று கேட்டார்கள். பிரம்மாவும் ''அவர் மகாவிஷ்ணு. ராட்சஸர்களும் அரக்கர்களும் மீண்டும் தலைதூக்க ஆரம்பித்து விட்டார்கள். பூவுலகில் அவர் களை ஒழிக்க ஒரு நரனோடு நாராயண னும் தேவை. மகாவிஷ்ணு தான் நாராயண னாக பூவுலகில் அவதரிக்க வேண்டும். அவரோடு தேவர்களும் பூலோகத்தில் பிறப்பார்கள். இந்த நாராயணனையும் அவரோடு சேர்ந்தவர்களையும் யாராலும் வெல்ல முடியாது. இதை அறியாதவர் களை மூடர்கள் என்று தான் கூற வேண்டும்''. என்றார்.

பீஷ்மர் இப்படி துரியோதனனிடம் கூறி ''நீ ஒரு கொடிய அரக்கனாகத் தான் இருக்கவேண்டும். அதனால் தான் கிருஷ்ணரிடமும் அர்ஜுனனிடமும் பகைமை காட்டுகிறாய்'' என்றார். அதன் பின் அவர்கள் தம் கூடாரங்களுக்குச் சென்று உறங்கலாயினர்.

ஐந்தாவது நாள் போர் ஆரம்பமாகியது. இரு தரப்புப் படைகளும் வியூகங்களை அமைத்துப் போரிடத்தயாராக நின்றன. கௌரவர்கள் மகரவியூகத்தை அமைக்க, பாண்டவர்கள் பருந்து வியூகத்தை அமைத்திருந்தார்கள். அதன்முன் பீமன், சிகண்டி, திருஷ்டத்துயும்னன் ஆகியோர் நின்றனர். இவர்களுக்குப் பின்னால் சாத்தியகியும், அர்ஜுனனும் இருந்தனர்.

துரியோதனன்துரோணரிடம் ''இன்று பாண்டவர்கள்அழிந்து போகும்படி போர்

புரியுங்கள்'' என்றான். அது கேட்டு உடனே துரோணர் சாத்தியகியைத் தாக்கலானார். துரோணருடன் பீஷ்மரும், சல்லியனும் இருந்தனர். அவர்களை அபிமன்யுவும், உப பாண்டவர்களும், சிகண்டியும் எதிர்த்தனர். பீஷ்மர் சிகண்டியுடன் போர் புரியவில்லை. துரோணர் தான் அவனை எதிர்த்து அடித்துத் துரத்தினார். அச்சமயம் அர்ஜுனன் பீஷ்மரை எதிர்க்கலானான். பாண்டவர் படைக்கும் கௌரவர்படைக்குமிடையே கடும் போர் மூண்டு இருதரப்பிலும் பல வீரர்கள் இறந்து வீழ்ந்தனர்.



அர்ஜுனன் அசுவத்தாமனைத் தாக்கி அவனது கவசத்தையே துளைத்தான். அதனை அசுவத்தாமன் சற்றும் லட்சியம் செய்யாமல் போர்புரியவே, அர்ஜுனன் அவனை மேலும் தொடர்ந்து தாக்காமல் வேறு வீரர்களைத் தாக்கலானான். துரியோதனனை பீமன் விடாமல் தாக்கினான். அபிமன்யு லட்சுமணகுமாரனுடன் போர் புரிந்தான். அப்போது கிருபர் தலையிட்டு லட்சுமண குமாரனைக் காப்பாற்றி வேறுபுறத்திற்கு அழைத்துச் சென்றார்.

சாத்தியகியோ, கடும் போர் புரிந்து கௌரவப் படையை அழிக்கலானான். இதைக் கண்ட துரியோதனன் அவனை எதிர்க்கப் பல மகாரதர்களை ஏவினான். சாத்தியகி அவர்களை அடித்துத் துரத்தி, அவர்களது தலைவனான பூரிசிரவஸை எதிர்த்துப் போரிட்டான். அவனோ, சாத்தியகியையும் அவனது வீரர்களையும் திக்கு முக்காடச் செய்தான்.

இச்சமயம் சாத்தியகியின் புதல்வர்கள் வந்து பூரிசிரவஸைச் சூழ்ந்து கொண்டார்கள். ஆனால் பூரிசிரவஸ் அவர்களை அடித்து வீழ்த்தினான். இது கண்டு கோபம் கொண்ட சாத்தியகி பூரிசிரவஸைக் கடுமையாகத் தாக்கவே, போர் பயங்கரமாக நடந்தது. சாத்தியகி பூரிசிரவஸின் ரதத்தைச் சேதப்படுத்தினான். அப்போது பூரிசிரவஸ் வாளை உருவிக்கொண்டு சாத்தியகியைத் தாக்கினான். இருவரிடையே வாட்போர் பயங்கரமாக நிகழ்ந்தது. இருவரும் சற்றும் சளைக்கவில்லை. இருவர் வாட்களும் ஒரே சமயம் ஓடியவே பீமன் வந்து சாத்தியகியை ஒருபுறமாக அழைத்துச் சென்றான். துரியோதனன் ஓடி வந்து பூரிசிரவஸை வேறுபுறமாகக் கொண்டு சென்றான். அப்போது சூரிய அஸ்தமனமாகும் வேளை நெருங்கவே, அன்றையப் போர் அத்துடன் நிறுத்தப் பட்டது.

ஆறாவது நாளில் போர் ஆரம்பமாகியது. பாண்டவர்கள் தம் படைகளை



மகரவியூகத்தில் நிறுத்தினார்கள். கௌர வர்களின் படைகள் கிரவுஞ்சவியூகத்தில் நின்றன. ஆனால் வியூகங்கள் வெகு நேரம் வரை நிலைத்திருக்கவில்லை ஆரம்பத்தி லேயே பீமன் துரோணரைத் தாக்கலா னான். துரோணரோ அம்புகளைப் பொழிந்து பீமனின் தாக்குதலை எதிர்க்க லானார். இதனால் கோபம் கொண்ட பீமன் எதிர்த் தாக்குதலில் துரோணரது தேரோட்டியைக் கொன்றான். துரோண ரோ, தன் தேரைத் தானே ஓட்டிக் கொண்டு பாண்டவர் படையை அழிக்கலானார். பீஷ்மர் வேறு துரோணரோடு சேர்ந்து தாக்குதலை பயங்கரமாக்கவே, பீமனுக்குத் துணையாக அர்ஜுனனும் வந்து கௌரவப் படைகளை அழிக்கலானான்.

பீமன் பீஷ்மரைச் சற்றும் லட்சியம் செய்யாமல் திருதராஷ்டிரனின் புதல்வர் களைக் கொல்லும் நோக்கத்துடன் பாய்ந்து சென்றான். கௌரவர்கள் அவனைச் சூழ்ந்து கொண்டார்கள். பீமனோ, தேரிலி ருந்து குதித்து தன் கதையால் அவர்களை அடித்து வீழ்த்தலானான். தொலைவில் துரோணருடன் போரிட்டுக் கொண்டிருந்த திருஷ்டத்யும்னன் ரதத்தில் பீமன் இல் லாததைக் கண்டு அவன் என்ன ஆனான் என்று திகைக்கலானான். பிறகு பீமன் கௌரவர்களுடன் போரிட்டுக் கொண்டி ருப்பதைக் கவனித்து திருஷ்டத்டயும்னன் அவனுக்கு உதவ விரைந்து சென்றான்.

பீமனோ, யானைகளையும், குதிரை களையும், படை வீரர்களையும் அடித்து வீழ்த்திக் கொண்டிருந்தான். கௌரவ வீரர்கள் பீமன் மீது அம்புமாரி பொழிந்து கொண்டிருந்தார்கள். இதைக் கண்ட திருஷ்டத்யும்னன் பீமனுக்கு உதவச் சென்றான். பீமனின் உடலில் அம்புகள் தைத்து பல காயங்கள் ஏற்பட்டிருந்தன. அவற்றிலிருந்து ரத்தம் வடிந்து கொண்டி ருந்தது. திருஷ்டத்யும்னன் அவனைத் தன்ரதத்தில் ஏற்றிக் கொண்டு அவனது உடலில் ஏற்பட்டிருந்த காயங்களைத் துடைத்து அவனை அணைத்துக் கொண்டு மிகவும் பாராட்டினான்.

அப்போது திருதராஷ்டிரனின் புதல்வர் கள் பீமனையும், திருஷ்டத்யும்னனையும் மிகவும் கடுமையாகத் தாக்கினார்கள். திருஷ்டத்யும்னன் சம்மோகனா ஸ்திரத்தை எய்து அவர்கள் மயக்க முற்று விழச் செய்தான். கௌரவர்கள் விழுவதைக் கண்ட துரோணர் பிரக்ஞாஸ்திரத்தை விட்டு அவர்களை

உணர்வுக்குக் கொண்டு வந்தார்.

பீமனுக்கும், திருஷ்டத்யும்னனுக்கும் என்ன ஆபத்து நேரிட்டதோ என்று பயந்து தருமர் அபிமன்யுவைச் சில வீரர்களுடன் அனுப்பினார். அவர்கள் உதவிக்கு வந்தது கண்டு பீமனும், திருஷ்டத்யும்னனும் உற்சாகம் அடைந்தார்கள். அவர்கள் முனைந்து போரிட்டுக் கொண்டிருக்கையில் பாஞ்சால மன்னனும், தன் தந்தையுமான துருபதனை துரோணர் துரத்தித் துரத்தித் தாக்கிக் கொண்டிருப்பதை திருஷ்டத்யும்னன் கண்டான். உடனே அவன் துரோணரைத் தாக்கச்சென்றான். துரோணரோ, பாண்டவர் படைகளைச் சிதறி ஓடும்படிக் கடுமையாகத் தாக்கிக் கொண்டிருந்தார்.

துரியோதனன் முதலானோர் பீமனை எப்படியாவது தாக்கிக் கொன்று விட வேண்டுமென்று முயன்று கொண்டிருந்தார்கள். ஆனால் அபிமன்யுவும், அவனோடு வந்த வீரர்களும் கௌரவர்களின் முயற்சியை முறியடித்து அவர்களை விரட்டி விட்டார்கள். இங்கு இப்படி நடந்து கொண்டிருக்கப் போர்க்களத்தில் வேறொரு இடத்தில் அர்ஜுனன் கௌரவர் படைகளைஅழித்துக் கொண்டிருந்தான்.

அன்றைய மாலைக்குள் பீமனைக் கொன்றுவிடத் துரியோதனன் துடியாய் துடித்தான். அதனால் அவன் பீமனைத் தாக்கப் போய்த் தன் கொடி, குடை முதலியவற்றை இழந்தான். பீமனின் எதிர்த் தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் திணறி ஓடி, கிருபரின் ரதத்தில் அவன் ஏறிக் கொண்டான். அப்போது திருஷ்ட கேது, அபிமன்யு, உபபாண்டவர்கள், கேகயர்கள் முதலானோர் திருதராஷ்டிரனனின் புதல்வர்களைத் தாக்கினார்கள். அதில் திருதராஷ்டிரனின்



புதல்வர்களில் ஒருவனான துஷ்கர்ணன் என்பவன் இறந்தான்.

சூரியன் மறைய ஆரம்பிக்கவே, அன்றையப் போர் முடிந்தது. துரியோதனன் தன் கூடாரத்திற்குச் சென்றான். தருமர் பீமனையும், திருஷ்டத்யும்னனையும் பாராட்டி அழைத்துச் சென்றார். சற்று இளைப்பாறியபின் துரியோதனன் பீஷ்மரிடம் "பிதாமகரே! நாம் என்னதான் வியூகம் அமைத்துக் கடுமையாகப் போரிட்டாலும் பாண்டவர்கள் அதனை உடைத்துத் தம் பராக்கிரமத்தைக் காட்டி விடுகிறார்களே. பீமன் இன்று நம் கிரவுஞ்சவியூகத்தைப் பிளந்து கொண்டு நுழைந்து என்னைத் தாக்கித் திக்கு முக்காடச் செய்து விட்டானே. அவன் புரிந்த பயங்கரச் சண்டையைக் கண்டு நான் பேச்சு மூச்சற்றுப் போய் விட்டேன். இதனால் நான் மிகவும் கவலைப்படுகிறேன். தாங்கள் எப்படியாவது பாண்ட வர்களை ஒழிக்க வேண்டும் என்று மீண்டும் வேண்டிக் கொள்கிறேன்" என்றான்.

அது கேட்டு பீஷ்மர் "துரியோதனா! நீ வெற்றி பெற வேண்டும் என்றுதான் நான் கடுமையாகப் போர் புரிந்து வருகிறேன். இதில் சற்றும் பின் தங்கி விடவில்லை. பாண்டவர்படையின் மகாவீரர்களும் மகாரதர்களும் சற்றும் சளைக்காமல் போரிடுகிறார்கள். அவர்களை வெல்வது எளிதல்ல. ஆயினும் நான் முழு மூச்சுடன் அவர்களை எதிர்ப்பேன். நீ சற்றும் கவலைப் படாதே" என்றார். இது கேட்டு துரியோதனன் ஆறுதல் அடைந்தான்.

அப்போது பீஷ்மர் "துரியோதனா! நம் பக்கத்திலும் துரோணர், சல்லியன், கிருதவர்மன், அசுவத்தாமன், சைத்தவன், பாஹ்லிகன், சித்திரசேனன், முதலிய மா வீரர்கள் இருக்கிறார்கள். கஜ, பத, துரக மென்னும் யானைகள், குதிரைகள், காலாட்கள் என நிரம்பிய படைகள் உள்ளன. இவ்வளவு இருந்த போதிலும் உனக்கு நல்லது செய்ய வேண்டும் என்று நினைத்தே ஒரு விஷயத்தைக் கூறுகிறேன். தேவர்களே திரண்டு வந்தாலும் பாண்ட வர்களை வெல்ல முடியாது. எனவே போரில் யார் வெற்றி பெறுவார்கள் என என்னால் கூற முடியாது" என்றார்.

துரியோதனனும், பீஷ்மரின் காயங்களுக்கு விசல்யகரணி என்ற மருந்தைத் தடவி அவருக்குப் பணிவிடைகள் செய்வதில் மூழ்கினான்.



# அம்புலிமாமா

## பாரத தரிசனம் வாசகர்களுக்குப் போட்டி

இந்த இதழிலுள்ள கேள்விகளின் விடைகள் அடுத்த இதழில் பிரசுரிக்கப்படும். அதற்குள் நீங்களே விடைகளை அறிய முயன்று பாருங்கள்.

1



அ) மதாச்சாரியார் ஒருவர் நம்நாட்டில் நான்கு திசைகளிலும் நான்கு மடங்களைப் பல நூற்றாண்டுகளுக்கு முன்நிறுவினார். அவர்யார்?

ஆ) ஒரு நாட்டின் மீது படை எடுத்துப் போய் அதை வென்ற பின் போரின் பயங்கர விளைவுகளைக் கண்டுமனம் மாறி அகிம்சை வழியை வாழ் நாள் முழுவதும் மேற்கொண்டு அதனைப் பரப்பிய மன்னன் யார்?

இ) பெண்கவிஞர் பாடகராக மாறி நாட்டைத்துறந்து தொலை தூர ஆலயத்தில் இருந்து பின் ஜோதியில்கலந்த ராணியார்?

ஈ) நான்கு வேதங்களில் வைத்திய சாஸ்திரம் பற்றிய விஷயங்களைக் கொண்ட வேதம் எது?

உ) ராஜயோக சூத்திரத்தை எழுதிய முனிவர் யார்?

2

பேரழகியான இளவரசிக்கு அவளது தந்தை தக்க வரனைத் தேடுகையில் அடுத்தடுத்த நாடுகளிலுள்ள இரு அரசகுமாரர்கள் அவளை மணக்கப் போட்டி போட்டனர். அவ்விரு நாடுகளும் இளவரசியின் நாட்டை விட பலம் பொருந்தியவை. இளவரசி தனக்குக் கிடைக்கா விட்டால் அந்நாட்டின் மீது படை எடுக்கப்போவதாக ஒவ்வொரு நாடும் பயமுறுத்தியது. சில நாட்களுக்கு பின் இருபுறத்திலும் இரு நாடுகளுடன் படை எடுப்பதாக அந்நாட்டு மன்னனுக்குச் செய்தி வந்தது. மன்னனுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. ஒரு சிலர் இளவரசியைக் கொன்று விட்டால் பிரச்சினை தீர்ந்து விடும் என்றார்கள். ஆனால் மன்னன் அதற்கு சம்மதிக்கவில்லை. தந்தையின் இக்கட்டான நிலையைக்காண சகியாமல் இளவரசி விஷம் குடித்து இறந்து போனாள். அந்த இளவரசி யார்? அவளை மணக்கப்போட்டிபோட்ட இரு அரசகுமாரர்கள் யார்?





# செக்கு மாடும் பூம்பூம் மாடும்

பாலூரில் பாலுசாமி ஒரு பணக்கார வியாபாரி. அவர் தன் மகன் அருணாசலத்தைப் பட்டணத்திற்குப் படிக்க அனுப்பி அவனது கைசெலவுக்கும் தாராளமாகப் பணம் அனுப்பி வந்தார். அருணாசலமும் தன் இஷ்டப்படி செலவு செய்து தன்னை மிஞ்சியவர் யாருமில்லை என்ற எண்ணத்தை வளர்த்துக் கொண்டு ஒருவாறு படிப்பை முடித்துக் கொண்டு தன் ஊருக்கு வந்து சேர்ந்தான்.

ஊரில் ஒரு வேலையும் செய்யாமல் திரிந்து வெட்டிப் பேச்சு பேசி தான் சொல்வதே சரி என்று கூறி அவன் பொழுதைப் போக்கி வந்தான். அதனால் அவனுக்குக் கோவில் மாடு என்ற பெயர் கூட ஏற்பட்டு விட்டது. அவனைக் கண்டாலே வெட்டிப் பேச்சிற்குப் பிடித்துக் கொள்வானே என்று எல்லோரும் பயந்து ஒதுங்கலாயினர்.

ஒரு நாள் அருணாசலம் தெருவில் சென்ற கந்தனைக் கூப்பிட்டான். அவன் கையில் கட்டு போடப்பட்டிருந்தது. அதனால் அருணாசலம் அவனிடம் ''கையில் என்னகட்டு?'' எனக் கேட்க அவனும் ''கீழே விழுந்ததால் காயம் ஏற்பட்டது'' என்றான்! உடனே அருணாசலம் ''எப்படி விழுந்தாய்?'' எனக் கேட்க அவன் ''ஓடினேன் கல் தடுக்கி விட்டது'' என்றான். ''ஏன் ஓடினாய்?'' என்று அவன் கேட்க கந்தனும் ''நாய் துரத்தியது. அதனால் ஓடினேன்'' என்றான். ''நாய் ஏன் துரத்தியது?'' என அவன் கேட்க கந்தனும் ''தெரியாமல் அதன் வாலை மிதித்து விட்டேன். அதனால் அது என்னைத் துரத்தியது

வெ. லாவண்யா



என்றான். ''தெரியாமல் ஏன் மிதித்தாய்?'' என்று கேட்க கந்தனும் ''அது தெருவில் படுத்திருந்ததைப் பார்க்கவில்லை. ஏதோ யோசனையில் நடந்து கொண்டிருந்தேன்'' என்றான். அருணாசலமும் விடாமல் ''அப்படி என்ன யோசனை'' என்று கேட்கவே கந்தன் எரிச்சலடைந்து ''மண்ணாங்கட்டி. ஆளைவிடு. சும்மா அறுக்காதே'' என்று கூறி அவனைத் திரும்பிக்கூடப் பாராமல் வேகமாக நடையைக் கட்டினான்.

அருணாசலமும் அவனைத் துரத்திக் கொண்டு போனான். மேலும் சில கேள்விகளைக் கேட்க அவன் நினைத்தான். ஆனால் கந்தன் அவன் பார்வையில் படாமல் தப்பி ஓடிவிட்டான். அப்போது சற்று தூரத்தில் செக்கு ஆட்டிக் கொண்டிருந்த சொக்கன் என்ற வாணியனைக் கண்டு அவனருகே சென்றான். அவனது செக்குமாடு வேறு எங்கும் போகாமல் செக்கை இழுத்துச் சுற்றி சுற்றி வந்து கொண்டிருந்தது. சொக்கன் அந்த மாடு குடிக்கக் கழுநீரில் பொட்டையும் தவிடையும் போட்டுக் கலக்கிக் கொண்டிருந்தான்.

அருணாசலம் சற்று நேரம் வரை அதை வேடிக்கை பார்த்து விட்டு சொக்கனிடம் பேசலானான். சொக்கனுக்கு அருணாசலத்தைப் பற்றி நன்கு தெரியும். அதனால் அவன் கேட்ட கேள்விகளுக்கு சொக்கன் 'உண்டு' இல்லை' என்று சுருக்கமாகப் பதில் கூறலானான். இதனால் அருணாசலத்திற்கே சலிப்பு ஏற்பட்டது.

சற்றுநேரம் அருணாசலம் பேசாமல் யோசித்து விட்டுப்பிறகு சொக்கனிடம் ''சொக்கா! இந்த மாட்டிற்கு ஏன் வீணாக பொட்டும் தவிடும் கலந்த கழுநீரை வைக்கிறாய்? இது ஓடியாடியா வேலை செய்கிறது?''. என்று கேட்டான். சொக்கனும் ''ஏன் செய்யவில்லையா? இருபத்து நான்கு மணிநேரமும் ஓயாமல் செக்கை இழுத்துக் கொண்டிருக்கிறதே'' என்றான். அதற்கு அருணாசலம் ''நாள் பூராவுமா? நீ வீட்டிற்குள் வேறு ஏதாவது வேலை செய்து கொண்டிருக்கும் போது கூடவா இது நிற்காமல் செக்கு இழுக்கிறதா? அது உனக்கு எப்படித் தெரியும்?'' என்று கேட்டான்.

சொக்கனும் சிரித்துக் கொண்டே

''அதுவா? அதன் கழுத்தில் ஒரு மணியைக் கட்டி இருக்கிறேன். அது செக்கை இழுத்துச் சுற்றிச் சுற்றி வரும் போது வீட்டினுள் இருக்கும் எனக்கு மணியோசை கேட்கும்'' என்றான். அப்போது அருணாசலம் ''மாடு சுற்றிவராமல் ஓரிடத்தில் நின்று கொண்டு கழுத்தை மட்டும் ஆட்டி மணியை ஒலிக்கச் செய்யக் கூடுமே'' என்றான்.

அது கேட்டு சொக்கன் எரிச்சலடைந்து அருணாசலத்தை எரித்து விடுபவன் போலப் பார்த்து ''அது ஒன்றும் அப்படி என்னை ஏமாற்றாது. ஏனென்றால் அது ஒன்றும் பட்டணத்திற்குப் போய்ப் படித்துவிட்டு வந்துவிடவில்லை'' என்றான். இதைக் கேட்டு அங்கிருந்த நாலைந்து பேர்கள் கைதட்டிப் பலமாகச் சிரித்தார்கள். அருணாசலம் தலை குனிந்து கொண்டு என்ன பேசுவது என்று தெரியாமல் நின்றான்.

அப்போது சொக்கன் ''இதோ பார் அருணாசலம்! ஒரு வேலையும் செய்யாமல் வெட்டிப் பேச்சு பேசித்திரிபவனை எல்லோரும் கோவில் காளை என்றும் சுற்றிவரும் செக்குமாடு என்றும் தலையாட்டும் பூம்-பூம் மாடு என்றும் சொல்கிறார்கள். செக்கு மாடாவது செக்கிழுத்து எண்ணெயை எடுத்துக் கொடுக்கிறது. பூம்பூம் மாடோ தன் எஜமானன் சொல்வதைக் கேட்டு அவனுக்கு ஏதாவது சம்பாதித்துக் கொடுக்கிறது. ஆனால் கோவில் காளையோ ஊரைச் சுற்றி வந்து பிறரை அதிரடித்து பிறர் பொருள்களை சேதப்படுத்தி பயன்படாமல் திரிகிறது. எனவே இந்த மூன்று வகை மாடுகளில் உன்னை எந்த வகை மாடு என நான் கூறலாம் என்பதை நீயே சொல்'' என்றான்.

அது கேட்டு அருணாசலம் பதில் எதுவும் பேசாமல் தலை குனிந்து கொண்டு சென்றான். மறுநாள் முதல் அவன் ஊர் சுற்றி வெட்டிப் பேச்சு பேசாமல் வியாபாரத்தில் தன் தந்தைக்கு உதவி வரலானான்.



இது அம்புலிமாமாவின் பரிசு

# பரோபகாரி பழனி

## திருடர்களும் சாமியாரும்

ஓவியம் : பாணி

பழனிதன் நாயுடன் ராமாபுரத்தை அடைந்தான். அப்போது இருட்டி விட்டது. தெருவில் மக்கள் நடமாட்டம் இல்லை. வீடுகளின் கதவுகள் எல்லாம் மூடப் பட்டிருந்தன. பழனி ஒரு வீட்டின் கதவைத் தட்டிய போது உள்ளே பேச்சுக்குரல் கேட்டது.

வீட்டுக்கதவின் சாவி ஓட்டை வழியாக அவன் பார்த்தான். உள்ளே இருவர் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள்.

அவன் உரக்க "குடிக்கத் தண்ணீர் வேண்டும்" எனக் கேட்கவே அவர்கள் போர்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டு படுத்து விட்டார்கள்.

இந்த ஊர்க்காரர்களையும் ஏதோ பயம் பிடித்துக் கொண்டிருக்கிறது என எண்ணி அவன் ஒரு கோவிலருகே சென்றான்.

மண்டபத்தில் மூவர் ஏதோ சாப்பிட்டுக் கொண்டும் குடித்துக் கொண்டும் இருந்தார்கள்.

தாகமாக இருக்கிறது. குடிக்க நீர் வேண்டும்.

"யாரடா நீ? என்ன வேண்டும்?"

"இதுதான் உள்ளது. இதால் தணித்துக் கொள். இந்தா பிடி."






ஊரிலுள்ள திருடர் பயத்தைப் போக்க சாமியார் தேவதைகளுடன் பேசப் போகிறார் என்று கேட்டு அதில் ஏதோ மர்மம் உள்ளதென அவன் எண்ணினான்.

ஜெய் சாம்பவீ! என்ன வேண்டும் சொல்

"திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்றிருக்கிறது, சுவாமீ!"






பக்தர்களே! திருடர் பிரச்சனை பற்றி தேவதைகளிடம் பேசினேன். திருடர் பயம் ஊராருக்கு இல்லாமல் செய்வதாக அவர்கள் கூறினார்கள். ஆனால் அடுத்த வெள்ளிக் கிழமைவரை திருடர்களின் செயல்களைப் பொறுத்துக் கொள்ள வேண்டும். அதன் பின் நல்ல காலம். இதுவே தேவதைகள் கூறியது.

எல்லோரும் போய் விட்டனர். பழனியின் மூளை வேகமாகச் செயல்பட்டது.

அன்றிரவு அவன் ஒரு பாறையின் பின் ஒளிந்து கொண்டு பார்க்க மூன்று முரடர்கள் மூட்டைகள் சுமந்து கொண்டு வருவதை கண்டான்.

சாமியார் தான் உட்கார்ந்திருந்த பீடத்திலிருந்து எழுந்து ஒரு ரகசிய மூடியைத் திறந்து அதன் வழியேஅவர்கள் கொண்டு வந்ததை எல்லாம் போட்டு மூடியை மூடினார்.

பழனி அங்கிருந்து ஊருக்குள் சென்றான்.

சாமியாரை தரிசிக்க இமயமலையிலிருந்து பல யோகிகள் வருகிறார்கள். பந்தல் போட வேண்டும். மண் வெட்டி கடப்பாரை கொண்டு வர வேண்டுமென்று சாமியார் கட்டளை இடுகிறார்.

பழனியின் தலைமையில் ஊரார் ஆயுதங்களுடன் வருவது கண்டு சாமியார் திடுக்கிட்டார். சாமியார் தடுமாறுவது கண்டு ஊரார் ஆச்சரியப்பட்டார்கள்.

மோசடி! குருவே!!


"உங்கள் குட்டு வெளிப்பட்டு விட்டது. உங்களைக் குழி தோண்டிப் புதைக்க கடப்பாரைகளுடன் வந்து கொண்டிருக்கிறார்கள்"
"என்ன இது? ஏன் இப்படி வருகிறார்கள்?"


"அப்பாவி மக்களை எத்தனை காலத்திற்கு இப்படியே ஏமாற்றிக் கொண்டிருப்பீர்கள்?" என்று கூறி பழனி அவரது பொய் தாடி, மீசைகளைப் பிடித்து இழுத்து எடுத்தான்.


ஊரார் போலி சாமியாரை நன்கு உதைத்தார்கள். பழனி பீடத்தினடியிலிருந்த மூடியைத் திறந்து அவரவர் நகைகளை எடுத்துக் கொள்ளுமாறு ஊராரிடம் கூறினான்.


போலிச் சாமியாரும் அவரது சீடர்களும் காவலதிகாரியிடம் ஒப்படைக்கப்பட்டனர். பழனி தன் நாயுடன் அவ்வூரிலிருந்து கிளம்பி வேறொரு ஊருக்குச் சென்றான்.

# அன்று இதே மாதத்தில் பிறந்தவர்

மகாத்மா காந்தி என்று உலகில் எங்கும் போற்றப்படும் மோகன்தாஸ் கரம்சந்த் காந்தி 1869 அக்டோபர் 2ல் போர்பந்தரில் பிறந்தார். இவரது தந்தை போர்பந்தர் மன்னரின் திவானாகப் பணிபுரிந்து, பின்னர் ராஜகோட் மன்னரிடமும் அதே பதவியில் பணிபுரிந்தார்.

மோகன்தாஸ் அவரது பதினெட்டாவது வயதில் சட்டம் பயில லண்டனுக்கு அனுப்பப்பட்டார். மூன்றாண்டுகளுக்குப்பின் பாரிஸ்டராகி இந்தியாவிற்குத் திரும்பிவந்தார். அப்போது ஏற்கனவே கஸ்தூரிபாயுடன் அவருக்குத் திருமணம் நடந்திருந்தது.



## மகாத்மா காந்தி

காந்திஜீ 1892ல் தென்னாப்பிரிக்காவிற்குச் சென்றார். அதுவும் இந்தியா போல பிரிட்டனின் குடியேற்ற நாடாக இருந்தாலும் அங்கு வெள்ளையர் ஆதிக்கம் இருந்ததால் இந்தியர்கள் கீழ்த்தரமாக நடத்தப் பட்டனர். ஒரு முறை காந்திஜீ ரயிலில் முதல் வகுப்பில் பயணம் செய்ய முயன்ற போது அவருடன் அதே பெட்டியில் பயணம் செய்ய ஒரு வெள்ளையன் விரும்பாததால் அவர் அவருடைய சாமான்களுடன் பிளாட்பாரத்தில் தூக்கி எறியப் பட்டார். இந்த அநீதியை எதிர்த்துப் போராட உறுதி கொண்டு அவர் தனக்கு நிறையப் பணம் கிடைக்கும் வழக்கறிஞர் தொழிலைவிட்டு விட்டு அந் நாட்டில் இந்தியரின் உரிமைகளைப் பாதுகாத்துத் தர அரும்பாடு பட்டார்.

அவர் 1914ல் இந்தியாவிற்குத் தென்னாப்பிரிக்காவிலிருந்து வந்தார். அப்போது அவருடைய புகழ் இந்தியா முழுவதும் பரவி இருந்தது. நான்கு ஆண்டுகளுக்குப்பின் பீகார் மாநிலத்தில் சம்பாரன் பகுதி விவசாயிகளின் சார்பில் அயல்நாட்டு அவுரித் தோட்ட முதலாளிகளுக்கு எதிராக அகிம்சை வழியில் போராட்டம் நடத்தினார். பஞ்சாபில் 1919ல் ஜாலியன்வாலாபாக் படுகொலை நடந்தது. பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் கொடுமையின் எந்த எல்லை வரை போவார்கள் என்பதை அது எடுத்து காட்டியது. காந்திஜி பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் ஒத்துழைக்க கூடாது என்ற இயக்கத்தை நடத்தினார். ஒரே ஆண்டிற்குள் அவர் தேசியத் தலைவராக ஆகி விட்டார்.

தனது வாழ்க்கையின் அடுத்த கட்டத்தை காந்திஜீ சமுதாய நலனுக்காக ஒதுக்கி ஏழை எளியவர்கள் தம் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ள நூல் நூற்று, கதர்த்துணி நெய்தல், தீண்டாமை ஒழித்தல் போன்ற திட்டங்களை அளித்தார். 1930ல் சபர்மதியிலிருந்து தண்டி வரை கூட்டமாய் நடந்து சென்று வரி செலுத்தாமல் உப்பு தயாரித்து உப்பு சத்தியாக்கிரகம் நடத்தினார். அதன் பின் நாட்டின் விடுதலைக்காகப் பல இயக்கங்களை நடத்திப் பல முறை சிறை சென்றார். முடிவில் 1942ல் ஆகஸ்ட் 9ல் ஆங்கில ஆட்சி இந்தியாவை விட்டு போய்விட வேண்டுமென அறிவித்தார்.

இதன்பயனாக நடந்த இயக்கம் கண்டு பிரிட்டிஷ் அரசாங்கம் இந்தியாவை விட்டு விலகுவது எனத் தீர்மானித்தது. 1947 ஆகஸ்ட் 15ல் இந்தியா சுதந்திரம் பெற்றது. ஆனால் நாடு இந்தியா, பாகிஸ்தான் என இரு நாடுகளாகப் பிரிக்கப் பட்டது. சிலர் மதத்தின் அடிப்படையில் நாடு பிரிக்கப்பட்டதற்கு காந்திஜீதான் காரணம் எனக் கருதினார்கள். அவர்களில் ஒருவன் அவரை 1948 ஜனவரி 30ல் துப்பாக்கியால் சுட்டுக் கொன்றான்.

# உல்லாசம் உற்சாகம் உண்டாகுமே...!



நான் எங்கப்பா, அம்மா அண்ணனோட அதிசயம் தீம்பார்க் போனேன். அடேயப்பா! எவ்வளவு பெரிய பார்க்தெரியுமா குட்டிகடல், சறுக்கி விளையாட ஸ்லைடு, ஜாலியா போட்டிங், குட்டிகுட்டியா நிறைய ட்ரைன், டோரா டோரா த்ரில்லான வாட்டர் சூட் இப்படி நிறைய்ய்ய விளையாட்டு. ஒரு நாள் முழுக்க ஜாலியோ ஜாலி மறுபடியும் நான் அதிசயம் தீம்பார்க் போகப் போறேன். என்ன நீங்க போகலையா, அப்ப சீக்கிரம் உங்க குடும்பத்தோட கிளம்புங்க. ஓ கே வா...











வெளியிலிருந்து கொண்டு வரும் உணவு பொருட்களுக்கு அனுமதி இல்லை.

**அனுமதி கட்டணம்**
பெரியவர்கள்-Rs.200/-
குழந்தைகள்-Rs.150/-

**பூங்கா அனுமதி நேரம்**
காலை 10.00 மணி முதல்
மாலை 6.30 மணி வரை







*Queen of Indian Theme Parks*

**MORE WATER... MORE FUN...**

**மதுரை-திண்டுக்கல் ரோடு, பரவை, மதுரை.**

SASI/MDU/2K



# ரூபாய் அற்பமா!

பாலையூரில் பச்சையப்பன் மளிகைக் கடை ஒன்று வைத்து நடத்தி வந்தான். அவன் கடைக்கு அடுத்த ஊர்ப் பணக்காரரான அம்பல வாணர் வாரம் ஒரு முறை வந்து தம் வீட்டிற்கு வேண்டிய சாமான்களை வாங்கிப் போவார். ஒரு முறை அவர் வந்து சாமான்கள் வாங்கியபோது கடைக்காரனுக்குக் கொடுக்க வேண்டிய பணத்தில் ஒரு ரூபாய் குறைந்தது.

அப்போது அவர் ''பச்சையப்பா! உனக்குக் கொடுக்க வேண்டியதில் ஒரு ரூபாய் குறைகிறது. அடுத்த வாரம் வரும் போது அதையும் சேர்த்துக் கொடுக்கிறேன். எனக்கு ஞாபகமறதி அதிகம். நான் மறந்து விட்டாலும் என்னிடம் கேட்டு வாங்கிக் கொள்'' என்றார். பச்சையப்பனும் அப்படியே செய்வ தாகக் கூறினான்.

அடுத்த வாரம் அம்பலவாணர் வந்து சாமான் வாங்கிய போது பச்சையப்பன் ''நீங்கள் ஒரு ரூபாய் பாக்கி தர வேண்டுமே'' எனவே அவரும் சிரித்துக் கொண்டே ஒரு ரூபாயைக் கொடுத்தார். அதற்கு அடுத்த வாரம் அவர் வந்தபோது பச்சையப்பன் அவர் ஒரு ரூபாய் பாக்கி கொடுக்க வேண்டும் எனவே, அவரும் அதைக் கொடுத்தார். மூன்றாவது முறையும் அவர் கொடு க்க வேண்டியது பாக்கி ஒரு ரூபாய் எனக் கூறி வாங்கிக் கொண்டான். இப்படியே பச்சையப்பன் மேலும் நான்கைந்து வாரங்களில் அவரிட

– ரேணுகாரவி -

மிருந்து ஒரு ரூபாய் வீதம் வாங்கி வந்தான்.

ஒருவாரம் அவன் ஒரு ரூபாய் பாக்கி என்று அவரிடம் கேட்ட போது அவரும் ''உன் ஒரு ரூபாய் பாக்கியை நான் எவ்வளவு தடவை தான் கொடுப்பது?'' என்று சற்றுக் கோபத்துடன் கேட்டார். பச்சையப்பனும் அவரைச் சாந்தப்படுத்தி ''நீங்கள் நான் கேட்டபோதெல்லாம் ஏன் ஒரு ரூபாய் கொடுத்து வந்தீர்கள்?'' என்று கேட்டான்.

அம்பலவாணரும் ''ஏனா? முதல் தடவை நான் ஒரு ரூபாய் கொடுத்த பின் நீ இரண்டாவது முறை பாக்கி என்று கேட்டபோது நான் ஞாபக மறதியால் ஒரு ரூபாய் பாக்கி கொடுக்கவில்லையோ என்று நினைத்து கொடுத்தேன். நீ மூன்றாவது முறை பாக்கி என்று கேட்டதும் நான் முந்தையவாரம் ஒரு ரூபாய் கொடுத்தது நன்கு நினைவில் இருந்தது. ஆனால் நீ தான் வாங்கிக் கொண்டதை மறந்து விட்டாயோ என்று எண்ணி ஒரு ரூபாய் தானே, போகட்டும் என்று கொடுத்தேன். அதற்கு அடுத்த வாரம் நீ கேட்ட போது உன் மீது பரிதாபப்பட்டுக் கொடுத்தேன். ஆனால் அடுத்த முறை நீ பாக்கி என்று கேட்ட போது இப்படிக் கொடுத்ததை மறந்து போகிற நீ எப்படி வியாபாரம் செய்து வாழப் போகிறாய் என்று சொல்ல நினைத்தேன். ஆனால் சொல்லவில்லை. அதன்





ரகசியமாக தானம் செய்வதும், வீட்டிற்கு வருபவரை கௌரவிப்பதும், தனக்குச் செய்யப்பட்ட உதவியைப் பிறரிடம் கூறுவதும், செல்வம் சேரும்போது கர்வம் அடையாமலும், பிறரை நிந்தனை செய்யாமல் இருப்பதும் நல்லவர்களுக்கு இயல்பாக உள்ள நற்குணங்களே.

பின் நீ எவ்வளவு தடவை தான் பாக்கி என்று கேட்டு ரூபாய் வாங்கிக் கொள்கிறாய் என்று பார்க்க நிச்சயித் துக் கொண்டேன்'' என்றார்.

அப்போது பச்சையப்பனும் ''நீங்கள் முதலில் என்னை மன்னி யுங்கள். முதல் தடவை நான் பாக்கி ஒரு ரூபாய் என்று கேட்ட போது கொடுத்தீர்கள். அதை நான் மறந்து விட்டு இரண்டாவது தடவை கேட்ட போது நீங்கள் பணம் கொடுத்து விட்டு ஆச்சரியப்பட்டதை கவனித் தேன். அப்போது நீங்கள் பாக்கி யைக் கொடுத்து விட்டது என் நினைவிற்கு வந்தது. அடுத்த தடவை நீங்கள் வரும் போது அதைக் கொடுத்து விட எண்ணினேன். ஆனால் அம்முறை நீங்கள் என்ன தான் சொல்வீர்களெனப் பார்க்கலா மென்று பாக்கியைக் கேட்டேன். நீங்கள் திடுக்கிட்டுப்பின் சமாளித் துக் கொண்டு பணம் கொடுத்தீர்கள். சரி, எவ்வளவு தடவைகள் நீங்கள் கொடுப்பீர்களெனப் பார்க்கலாம் என்றே நானும் கேட்டேன். நீங்க ளும் கொடுத்தே வந்தீர்கள். நீங்கள் கொடுத்த ரூபாய்கள் எல்லாம் இந்தப்பையில் உள்ளன. பண விஷ யத்தில் தாட்சணியம் கூடாது. கண் டிப்பு இருக்க வேண்டும். ஒரு ரூபாய் தானே என்று அலட்சியப்படுத்தக் கூடாது. கணக்கு என்றால் கணக்கு தான் ''என்றான்.

அம்பலவாணரும் ''ஆமாம் பச்சையப்பா! நீ சொல்வது சரி தான்'' என்று தலையை ஆட்டினார்!




THE AMUL CHEESE BOY
IN PICNIC PANIC


One bright sunny day...


...a picnic is in progress.


Little Munnu Verma crawls away.
GURGLE


Suddenly, huge rocks come tumbling down the mountain.
RUMBLE


Amul cheese boy eats an Amul cheese slice...


...and becomes strong and powerful.


He smashes the falling rocks...
BANG


...reducing them to small pieces.
CRACK


Munnu is rescued and back with his family.


All thanks to the cheese that has more milk in it.


Amul cheese slices.
Amul cheese. Yes please!
Amul



# போட்டோ வாக்கியப் போட்டி

தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும்.

**போட்டோ வாக்கியப் போட்டி**

*(முகவரி கீழே தரப்பட்டுள்ளது)*





போட்டிக்கான தலைப்புகளை தபால் கார்டில் எழுதி அக்டோபர் 25-ம் தேதிக்குள் வந்து சேருமாறு அனுப்ப வேண்டும். போட்டியில் வெற்றி பெற்ற தலைப்புகள் டிசம்பர் 2000 மாத இதழில் வெளியிடப்படும். சிறந்த தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு

**வாழ்த்துக்கள்**



**ஆகஸ்ட் 2000 போட்டியில்**
**பரிசு பெற்றவர் :**
**டி. வெங்கடேசன்**
**12/36, குப்பம்பட்டி,**
**ஜலகண்டபுரம் வழி**
**மேட்டூர் தாலுக்கா - 636 50.**



**பரிசு பெற்ற தலைப்புகள்**

முதலாவதுபோட்டோ : மழலையின் மகிழ்ச்சி மாசற்ற நீரிலே
இரண்டாவதுபோட்டோ : மழலையின் மகிழ்ச்சி மாசுள்ள நீரிலே

ofm

# RUCHI RICE

WITH ITALIAN & SOUTH KOREAN KNOW-HOW

## new sensation in Asia

**RICE MADE FROM PURE WHEAT**

**100% VEG. LOW FAT**

### HOW TO PREPARE

**RUCHI VEG. RICE** — Serve : 4-6 persons

INGREDIENTS : Ruchi Rice - 200 gms., Oil - 50 gms., Beans -100 gms.,Carrot - 50 gms., Onion - 50 gms.,Tomato -50 gms., Green Chilies - 2., Black Pepper 1/2 tsp., Water - 400 gm.,Salt - 1 tsp.

PREPARATION : Fry Ruchi Rice on low flame until half boiled, after 10 min. wash in cold water, see that rice granules remain separate. Dry up the rice in an open space, keeping ready for cooking. Heat oil in a deckhi or pan. Add chopped onions, green chilies and fry. Then add beans, carrots, tomato pieces and salt to taste. Fry upto 2 minutes. Add warm water as required and cover it. Ensure the rice is cooked up properly and is soft, then add black pepper powder and serve hot.

**You can also prepare Biriyani, Curd Rice, Upma, Halwa, Kheer etc.**




**OUR OTHER VERMICELLI PRODUCTS**

- Star Vermicelli
- Rice Vermicelli
- Stelline Vermicelli
- Funghetti Vermicelli
- Penne Vermicelli
- Fusilli Vermicelli
- Macaroni

**WHEAT RICE BEST RICE RUCHI RICE**

**RUCHI RICE**

- TASTY
- NUTRITIOUS
- EASY TO COOK

- DON'T WASH
- FRY LIGHTLY
- BOIL FOR 5 MINUTES

**OM OIL & FLOUR MILLS LTD.**

Type II/8, Industrial Estate , Cuttack. Tel.: ( 0671 ) 341320 / 344439, Fax.: 344538

e-mail : ruchis@cal2.vsnl.net.in, website- www.ruchispices.com

A quality product of Om Oil & Flour Mills Ltd. Makers of Ruchi Spices.
Winner of Spice House Certificate.




AVAILABLE AT ALL LEADING SHOPS. DEALERS ENQUIRIES SOLICITED.

Samperk/2000